# திருமுருகாற்றுப்படை





திருவிடைமருதூர்
ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்.

வெளியீடு எண் 26.

உ
சிவமயம்

நக்கீரதேவநாயனுர் அருளிய

# திருமுருகாற்றுப்படை

(பொழிப்புரையுடன்)

இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்ருவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது.



திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்
எட்டாவது ஆண்டு
திருமுறைப் பாராயண நிறைவுவிழா வெளியீடு
21—1—1966



ஸ்ரீ மகாலிங்கப்பெருமான்

உ

சிவமயம்

# முன்னுரை

முருகன் அழகன் என்னும் திருப்பெயருடையோன். அவனுடைய அழகு அழியா அழகு. முருகனை வழிபடுவோர் நாளும் இடைவிடாது ஓதுவது நக்கீரர் அருளிய திருமுருகாற்றுப்படை என்னும் அருள் நூல் ஆகும். இது சங்கத்தொகை நூலாகிய பத்துப்பாட்டுள் முதற்கண் வைக்கப்பட்டுள்ளது.

ஆற்றுப்படையாவது வீடுபேறடைய எண்ணிச் செல்லும் ஒருவனை வீடுபெற்றான் ஒருவன் ஆற்றுப் படுத்துவது. இங்கு முருகனை வழிபட்டு வீடுபெற்றான் ஒருவன், முருகனை வழிபட எண்ணிச்செல்லுகின்ற மற்றொருவனை நெறியறிந்து வழிப்படுத்துவது. ஆறு - வழி. படை - படுத்துதல்.

இந்நூலை முறைப்படி ஓதினால் ஓதுபவர்களின் துன்பம் தொலையும்; அறிவு பெருகும்; அனுபவம் உண்டாம். முடிவில் பேரின்பப்பெருவாழ்வு கிட்டும். இத்தகைய முழுப்பயனையும்பெற இந்நூலைப் பொருள் உணர்ந்து ஓதவேண்டும்.

இச்சீரிய நூற்கு நச்சினார்க்கினியர், பரிமேலழகர், சரவணப்பெருமாளையர் போன்றோர் உரைசெய்துள்ளார்கள். அவ்வுரைகள் யாவும் கற்றோர்க்கு அன்றி, மற்றையோர்க்கு இன்பம் பயப்பது அருமை.

இந்நிலை உணர்ந்த திருவாவடுதுறை ஆதீனத்து 21வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அடியேனை இந்நூற்குத் தெளிவான பொழிப்புரை ஒன்று எழுதுமாறு அருளாணையிட்டார்கள். அடியேன் அவர்களது ஆணையைச் சிரமேற்கொண்டு இதனை ஆக்கியுள்ளேன்.

இவ்வுரை நூலோடு முருகன் புகழ்ப்பனுவல்களாயுள்ள கந்தரலங்காரம், திருப்புகழ், முருகன் பிள்ளைத் தமிழ் ஆகியவைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. இவை யாவும் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமான திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானப் பன்னிரு திருமுறைப் பாராயண நிறைவுவிழா மலராக வெளிவருகின்றது. அறிஞருலகம் பிழையுளதேல் பொறுத்தருள்க.

இங்ஙனம்,

திருவிடைமருதூர், 10—1—66.

பொன். சுப்பிரமணியபிள்ளை,
தலைமைத்தமிழாசிரியர்,
திருவாவடுதுறை ஆதீன உயர்நிலைப்பள்ளி.

# நக்கீரர் வரலாறு

பாண்டிவளநாடு பழம்பெருமையை உடையது. பாண்டியநாட்டின் தலைநகர் மதுரை. முதல், இடை, கடை என்று மூன்று சங்கங்கள் மதுரையிலிருந்தன. நக்கீரர் கடைச்சங்கப்புலவர் குழாத்துள் தலைமை பெற்றவர். இவர் தலைமையின்கீழ் நாற்பத்தெட்டுப் பெரும்புலவர்கள் தமிழ் ஆராய்ந்தார்கள்.

நக்கீரர் இளமையிலேயே கல்வி அறிவு அடக்கம் முதலியவைகளில் சிறந்தவராக விளங்கினர். இவர் தந்தை கணக்காயனர் என்பவர். இதுபற்றி இவரைக் கணக்காயனர் மகனர் நக்கீரர் என்று வழங்குவார் ஆயினர். நக்கீரர் தந்தையறிவு மகனறிவு என்பது போலத் தமிழ்ப்புலமையில் மேம்பட்டு விளங்கினர். இவருடைய பாடல்கள் தொகைநூல்களில் காணப் படுகின்றன. நக்கீரரது குலத்தைப்பற்றி இதுவரை எவரும் ஒரு அறுதியான முடிவு கண்டிலர்.

இவர் முருகக்கடவுளிடம் சிறந்த அன்புடையார் என்பதை இவரியற்றிய திருமுருகாற்றுப்படையால் அறியலாகும். இவர் சைவசமயத்தைச் சார்ந்தவர். இவ்வுண்மையைப் பதினெராந்திருமுறையில் உள்ள இவர் நூல்களால் அறியலாம். சிவபெருமானை இவர் இடைவிடாது வழிபட்டவர்.

இவரது பாடல்கள் அகம், புறம் என்ற திணை களில் காணப்படுகின்றன. நக்கீரர் தாம் கண்ட ஒவ் வொரு காட்சியையும் கண்ணுல் கண்டாங்குப் பாடும்

பேராற்றல் உள்ளவர்; கலங்காத அறிவுடையவர்; அஞ்சாநெஞ்சம் உடையவர்; எவருடனும் வழக்காடு வதில் பின்வாங்கமாட்டார்.

நக்கீரர் காலத்திலிருந்த புலவர்கள், அரசர்கள் ஆகியோரது காலங்களை அறியப் போதிய சான்றுகள் இல்லை. பலர் பலவாறு கூறுவர். கடைச்சங்ககாலப் புலவர் ஆகலின் இவரது காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டாகும். நக்கீரர் இயற்றியருளிய நூல்கள்: திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை, கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி, திரு ஈங்கோய்மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, கண்ணப்ப தேவர் திருமறம், நக்கீரர் நாலடி நாற்பது, களவியல் உரை முதலியனவாம்.

இந்நூல்களேயன்றி நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய தொகைநூல் களிலும் சிலபாடல்கள் காணப்படுகின்றன. இவரது வரலாறு திருவிளையாடற்புராணம் முதலிய நூல் களில் விரிவாகக் காணப்படுகிறது.

## திருமுருகாற்றுப்படை

நக்கீரர் பாண்டியநாட்டுப் பழம்பெரும் புலவர். பாண்டிய நாட்டில்தான் சோமசுந்தரக்கடவுள் அறு பத்துநான்கு திருவிளையாடல்களை நிகழ்த்தினர். அந் நாட்டின் தலைநகர் மதுரை. நக்கீரர் கடைச்சங்கப் புலவர்களுள் தலைமைபெற்று விளங்கியவர். இறைவ னுக்கும் நக்கீரருக்கும் உண்டாகிய வாக்குவாதத்தில்

இவருடைய அஞ்சாத்தன்மையை இறைவன் வியந்தாராயினும் அவரால் இவருக்குச் சாபம் ஏற்பட்டது. அச்சாபம் காரணமாக இவர் தொழுநோயடைந்தார். இறைவன் கீரனே! நீ கயிலைகாணில் உன்னைப்பற்றிய தொழுநோய் நீங்கும் என்று அருள்செய்தார்.

நக்கீரர் இவ்வுரை கேட்டதும் சங்கப்புலவர்கள் பால் அரிதின் விடைபெற்றார். கயிலையை நோக்கி விரைந்து செல்லலானார். காசி கேதாரம் இவைகளைக் கடந்தார். அந்நிலையில் அங்கு ஒரு பெரிய தடாகத்தைக் கண்டார். அதில் நீராடினார். அத்தடாகத்தின் கரையிலிருந்த பெரிய ஆலமரத்தின் நிழலில் சிவபூசை செய்துகொண்டிருந்தார். அவ்வமயம் ஆலமரத்திலிருந்து ஒரு இலை அவர் முன்பாக விழுந்தது. அந்த இலை பாதி தண்ணீரிலும் பாதி கரையிலுமாக விழுந்துகிடந்தது. தண்ணீரில் விழுந்த பாதி மீனும், கரையில்விழுந்த பாதி பறவையுமாக மாறிற்று. மீன் பறவையைத் தண்ணீருக்குள் இழுத்தது. பறவை மீனைத் தரைக்கு இழுத்தது. நக்கீரர் இப்புதுமையைக் கண்டு மிகவும் வியப்படைந்தார். அதனால் நக்கீரர் செய்த சிவபூசையில் தவறு ஏற்பட்டது.

இவ்வாறு அவ்வாலமரத்தடியில் சிவபூசையில் வழுவிய தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரை ஒரு பெரிய மலைக்குகையில் ஒருபூதமானது அடைத்துவைத்திருந்தது. ஆயிரத்துக்கு இன்னும் ஒருவர் வேண்டுமே என்று அக்கரியபூதம் காத்துக் கொண்டிருந்தது. பூசையில்வழுவிய நக்கீரரை உடன் தூக்கிச்சென்று அக்குகையுள் அடைத்தது. ஆயிரம் என்ற எண்ணிக்கையும் முடிந்தது. பிறகு அப்பூதம்

நியமப்படி, அகப்பட்ட அந்த ஆயிரம் பேர்களேயும் உண்ண நேராடப்போயிற்று.

முன்பே அக்குகையுள் அடைபட்டிருந்தவர்கள் நக்கீரரை நோக்கிஞர்கள். யாங்கள் நீண்டகாலமாக இச்சிறையில் அடைபட்டிருக்கிரும்; இருந்தாலும் இப்பூதம் எங்கட்கு இன்றுவரை உணவு முதலியன கொடுத்துவந்தது; அதனுல் யாம் உயிர்பிழைத்து இருந்தோம்; இன்று எதிர்பாராமல் நீர் ஒருவர் இங்கு வந்து சேர்ந்தீர்; உம்மால் நாங்கள் அனேவரும் பூதத்திற்கு இன்று இரையாகப் போகிரும் என்று அழலானுர்கள்.

நக்கீரர் அவர்களது உரைகளேக் கேட்டார். மன மிரங்கிஞர். உடனே முருகப்பெருமானே எண்ணிஞர். அவனேப் பாடிஞல் ஒழிய நாம் உய்வதற்கு வேறு வழியில்லே என்ற முடிவிற்கு வந்தார். உடனே திரு முருகாற்றுப்படை என்ற இவ்வருள்நூலேப்பாடிஞர். முருகப்பெருமானும் அவருக்குக் காட்சிகொடுத்தார்; இவர்களே உண்ணவந்த பூதத்தைத் தமது கதையால் கொன்ருர்; எல்லோரையும் சிறையிலிருந்து விடுதலே செய்தார்; உடனே நக்கீரரைப் பார்த்தார். நக்கீரரே! இந்த அருள்நூலே நாடோறும் அன்புடனே ஓதுபவர் களுக்கு வேண்டிய வரங்களேக் கொடுத்து வருவோம் என்று திருவருள்செய்தருளிஞர். இதுவே இந்நூல் தோன்றிய வரலாறு.

இந்நூல் 317 அடிகளேக்கொண்டது. ஆற்றுப் படையாவது வீடுபெற எண்ணிச் செல்லும் ஒருவனே முன்பு வீடுபெற்ருன் ஒருவன் முருகக்கடவுளிடத்தே

ஆற்றுப்படுத்துவதாகப் பாடப்படுவது. இம்முறையி லேயே நக்கிரர் இதனைப் பாடியுள்ளார். இப்பாடல் முருகப்பெருமான் உறைகின்ற பல திருப்பதிகளுள் சிறப்புடைய பதிகளாகிய திருப்பரங்குன்றம், திருச் சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்று தோருடல், பழமுதிர்சோலை ஆகியவைகளைப் பற்றிய தாகும். இந்த ஆறு தலங்களுமே முருகப்பெருமா னுடைய ஆறுபடைவீடுகள் ஆகும். அவ்விடங்களில் பெருமான் உறைந்து அருள்புரிகின்ற சிறப்பே பாடல் களில் காணப்படுகின்றது.

# முருகன் பெருமை

முருகனின் முழுமுதற்றன்மையை அறியாதார் சைவசமயத்தினருள் யாரும் இல்லை. அப்பெருமான் தன்னை வழிபடுகின்றவர்களுக்கு என்றும் இம்மை மறுமைப் பயன்களைக் கொடுத்து அருள்செய்கின்றான். முருகனின் புகழ் வேதாகமங்களிலும், புராண இதிகாசங்களிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. சங்க இலக்கியங்களில் அதிலும் சிறப்பாகப் பரிபாடல் என்னும் நூலில் முருகனைப்பற்றிய வரலாறு காணப் படுகிறது. அவைகளைநாம் விரிவாக அறியவேண்டும். அவற்றிற்கு அடிப்படையாக அப்பெருமான் வரலாறு இங்குச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

முருகப்பெருமான் சிவகுமாரன் என்பது யாவரும் அறிந்த ஒன்று. சிவம் என்னும் செம்பொருளே, உலகிற்கு முழுமுதற் கடவுளாக விளங்கிக்கொண்டிருக்கின்றது. அம்முழுமுதற்பொருளின் மார்பினிடமாகப் பெருமான் தோன்றியருளினுரென்று வாதுளாகமம் கூறுகின்றது. புராணங்களோ மாருகப் பரமேசுவரனுடைய நெற்றிக்கண்களினின்று தோன்றிய பொறிகளிலிருந்து தோன்றியருளினுரென்று கூறுகின்றன.

முருகப்பெருமான் வரலாறுகள் புராணங்களில் பலவாறு கூறப்பட்டிருக்கின்றன. இருப்பினும் சூரபதுமனைக்கொன்று இச்சாசத்தி, ஞானசத்தியாகிய தெய்வயானை, வள்ளியம்மையை மணந்து ஆன்மாக்களுக்கு அருள்செய்துகொண்டுள்ள வரலாறே அனைவராலும் போற்றிப்பயிலப்படுகிறது. இவ்வுண்மையை

"ஏதிலாக் கற்பம் எண்ணில சென்றன, ஆதலால் இக்கதையும் அனந்தமாம்" என்னும் கந்தபுராணச் செய்யுள் வலியுறுத்தும்.

தக்கன் பிரமனுடைய மைந்தன். அவன் பழவினை காரணமாகச் சிவனை நிந்தித்தான். சிவனை இகழ்ந்து வேள்வியும் செய்தான். அந்த வேள்விக்குப் பிரமன் திருமால் இந்திரன் முதலாகிய தேவர்கள் அனைவரும் சென்றிருந்தார்கள். இத்தேவர்கள் அனைவரும் முன்பு வீரபத்திரரால் தண்டிக்கப்பட்டனர். அதிலும்நீங்காத பாவத்தால் தேவர்கள் சூரபதுமனிடமும் அகப்பட்டுத் துன்பத்தை அடைந்தார்கள். அசுரர்கள் கொடுத்த துன்பத்தைத் தேவர்களால் பொறுக்கமுடியவில்லை. எல்லோரும் ஒன்றுசேர்ந்து இறைவன்முன் சென்று முறையிட்டார்கள். சிவபெருமான் தேவர்களைநோக்கி 'நாம் ஒரு குமாரனைத்தந்து உங்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கி ஆண்டுகொள்வோம்' என்று அருள்செய்தார்.

சிவபெருமான் ஐந்து திருமுகங்களோடு அதோ முகமுங்கொண்டு எழுந்தருளியிருந்தார். பெருமான் எண்ணியவாறு ஆறு முகங்களிலும் உள்ள நெற்றிக் கண்களிலிருந்து ஆறு தீப்பொறிகள் தோன்றின; அவை உலகமுழுதும் பரவின. அந்தப் பொறிகளின் வெப்பத்தைத் தேவர்களாலும் தாங்கமுடியவில்லை. தேவர்களெல்லாம் இறைவன்பால் சென்று அடைக்கலம் புகுந்தனர். சிவபெருமான் அப்பொறிகளைத் தாமே அருகில் வர எண்ணினார். அவ்வாறு வந்த பொறிகளைத் தீ வளி ஆகிய இருவர்பால் கொடுத்தார். அவ்விருவர்களும் இறைவனது ஆணையின்படி

அவைகளைச் சரவணப்பொய்கையிலே இட்டார்கள். சரவணப்பொய்கையில் இட்ட ஆறு பொறிகளும் ஆறு குழந்தைகளாகத் தோன்றின. அத்தோற்றமே அழகனுகிய முருகன். அவ்வாறு தோன்றிய நாள் வைகாசிமாத விசாகமாம்.

இவ்வாறு தோன்றிய ஆறு குழந்தைகளையும் கார்த்திகைப்பெண்கள் அறுவரும் பாலூட்டி வளர்த்தார்கள். இந்நிலையில் ஒருநாள் இறைவன் இறைவியோடு சரவணப்பொய்கையை அடைந்தார். இறைவி இறைவன் அருளைப்பெற்று, அந்த ஆறு குழந்தைகளையும் ஒருசேர எடுத்தார். இறைவியின் அருளால் ஆறும் ஒரு வடிவமாகிக் கந்தன் என்னும் பெயரைப் பெற்று விளங்கியது.

கந்தனுகிய முருகன் இளமையில் செய்த செயல்கள் அளவில. ஒரு சமயம் இறைவனை வணங்கிச் சென்ற பிரமனைப் பிரணவத்துக்குப் பொருள் வினவினுர். பிரமன் அஃதறியாது மயங்கினுன். பிரமனைச் சிறையில் அடைத்தார். தாமே உலகப்படைப்பை மேற்கொண்டு செய்தார். பின்னர், சிவபெருமான் ஆணையை ஏற்றுப் பிரமனைச் சிறையினின்றும் விடுவித்தார். இறைவனுக்குப் பிரணவப்பொருளை உபதேசித்தார். அதனுல் சுவாமிநாதன் என்னும் திருப்பெயரையும் பெற்ருர். பின்னர், பிரணவப்பொருளை அகத்தியருக்கும் உபதேசித்தார்.

முருகப்பெருமானின் இவ்விளையாடலைக் கண்ட பெருமான் குழந்தையை அழைத்து, நீ சூரபதுமனையும் ஏனைய அசுரர்களையும் அழித்துப் பிரமன் முதலிய தேவர்களின் துன்பங்களைப் போக்கியருளுக என்று

ஆணையிட்டார். பெருமான் இறைவன் ஆணையைச் சிரமேற்கொண்டார்.

உடன் முருகப்பெருமான் பல வீரர்களோடு நில உலகத்தை அடைந்தார். முன்னர், தாரகாசுரனையும் கிரௌஞ்சமலையையும் அழித்தார். பின்னர் பிரமன் முதலிய தேவர்கள் வணங்கப் பல தலங்களையும் கண்டார். முடிவில் திருச்செந்தூரை அடைந்தார். சூரபதுமன்பெற்றுள்ள வரம், செல்வம், சிறப்பு, இந்திரன் குறை ஆகியவைகளை அறிந்தார். பின் நவவீரர்களுட் சிறந்த வீரவாகுதேவரைச் சூரபதுமனிடம் தூதாக அனுப்பினார்.

தூதுசென்ற வீரவாகுதேவர் சூரபதுமனைநோக்கி, சூரபதுமனே! நீ தேவர்களைச் சிறைவீடு செய்தால் இன்னும் பலகாலம் அரசுபுரியலாம்; இல்லையேல் இன்றே நாம் உனது கிளையையெல்லாம் அழித்து உன்னையும் எம் இறைவேலுக்கு இரையாக்குவோம்; இதைத் திண்ணமாக உணர் என்றார்.

சூரபதுமனோ உண்மையுணர்வு அற்றவன். வீரவாகுதேவர் கூறிய மொழி அவனது செவியில் ஏறவில்லை. அதனால் பெருமான் வீரவாகுதேவர் முதலிய துணைவரோடு சூரபதுமன் நகரமாகிய வீரமகேந்திரபுரத்தை அடைந்தார்; சூரபதுமனுடைய வீரர்களை எல்லாம் அழித்தார். சிங்கமுகாசுரன், பானுகோபன் முதலியவர்களையும் கொன்றார். முடிவில் மாயையில் மிகவும் வல்லவனாய்ப் பல வரங்கள்பெற்றுச் செல்வச் செருக்கோடிருந்த சூரபதுமனையும் தமது வேற்படையால் இருகூறாக்கினார். அந்த இருகூறும் ஒன்று

மயிலாகவும், ஏனையது கோழியாகவும் வர, பெருமான் மயிலை வாகனமாகவும், சேவலைக் கொடியாகவும் ஏற்றருளினார். அன்றே திருச்செந்தூரடைந்தார்.

பின்னர், பெருமான் அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பரங்குன்றை அடைந்தார். இந்திரன் தன் மகளாகிய தெய்வயானை அம்மையாரை மணஞ்செய்து கொள்ளுமாறு பெருமான்பால் வேண்டினான். பெருமானும் அதற்கு இணங்கி மணஞ்செய்துகொண்டார். இந்திரனுக்கும் தேவலோக ஆட்சியை நல்கினார். பின் முருகப்பெருமான் தெய்வயானையம்மையாருடன் கந்த வெற்பினை அடைந்தார்.

சிலநாள் சென்றபின் பெருமான் திருத்தணிகை மலையை அடைந்தார். நாரதரால் வள்ளியம்மையாரின் அழகு குணம் முதலியவற்றை அறிந்தார். உடனே அவ்வம்மையார்பால் சென்றார். வேடர்கள் கொடுப்ப வள்ளியம்மையை மணந்தார். அவ்வம்மையாரோடும் கந்தவெற்பினை அடைந்த பெருமான் அடியார்கட்கு அருள்வழங்கிக்கொண்டிருக்கிறார்.

அத்தகைய பெருமான் பிள்ளையார் முதலாகிய பலவேறு திருப்பெயர்களைக்கொண்டு இப்பூவுலகில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன் குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறுபடைவீடுகளிலும் எழுந்தருளியிருந்து வழிபடும் அடியார்கட்கு வேண்டுவனவற்றைத் தந்து அருள்புரிகின்றார்.

முருகப்பெருமானை வழிபடுவதால் மக்களாகிய நாம், செல்வம் கல்வி மக்கட்பேறு ஞானம் வீடுபேறு

முதலிய எல்லாவிதமான நன்மைகளையும் அடைந்து வாழ்வோம். அத்தகைய பயன் எய்த விரும்புவோர் அவனது வரலாற்றை உணர்வதோடு அவன் அருள் நூல்களையும் நாள்தோறும் படித்துப் பயன்பெற வேண்டும்.

முருகப்பெருமான் புகழைத் தங்கள் நூல்கள் வழியாக வழிபட்டவர் நக்கீரர், கச்சியப்பசிவாசாரியார், அருணகிரிநாதர், குமரகுருபர சுவாமிகள் முதலியோரும் ஆவார்கள். இவர்கட்கெல்லாம் இகபர சுகங்களை முருகப்பெருமான் அருளினர் என்பது உலகறிந்த ஒன்று.

நாமும் நமது தீவினை ஒழியப் பெருமானது இணையடிகளைப் பரவி, இகபரசுகங்களைப்பெற்று இன்புற்று வாழ்வோமாக !

௨

ஒருமுரு காவென்றன் உள்ளங்
குளிர உவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு
வா நிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம்
பா நிற்பத் தையல்முன்னே
திருமுரு காற்றுப் படையுட
னேவரும் சேவகனே.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்

# திருமுருகாற்றுப்படை

திருச்சிற்றம்பலம்

## திருப்பரங்குன்றம்

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்(கு)
ஓவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்

---

விளக்கம். வரி *1-6:* உலகின் இருளைநீக்கச் சூரியன் கடலினிடத்தே தோன்றுகிறான்; மகாமேருமலையை வலமாகச் சுற்றிவருகின்றான். உலகினர் யாவரும் மகிழ்வுகொள்கின்றனர். முருகனது பேரொளி நெடுந் தூரம் சென்று விளங்குகிறது. அப்பெருமானுடைய திருவடிகள் அழகும் வலிமையும் உடையன. ஆன் மாக்களிடம் இயல்பாக அமைந்துள்ள தீமைகளைப் போக்கி, அவர்களைக் காப்பாற்றுகின்றான். முருக னுடைய கைகள் நன்மை தருபவை. வலி மிக்கவை. எதிர்ப்போரை அழிக்கும் ஆற்றலுடையவை. விண் ணவர் தலைவனாகிய இந்திரனின் மகள் தெய்வயானை.

1. உலகம் - உயர்ந்தோர்; இருடிகள். வலம் - வலமாக. ஏர்பு - எழுந்து. 3. அவிர் - விளங்கல். 4. உறுநர் - வந் தடைந்தோர். மதன் - அழகு. நோன் – வலிமை.

செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்(து)

---

முருகன் கற்பிற்சிறந்த தெய்வயானையை மனைவியாகப் பெற்றவன். தெய்வயானையின் நெற்றி எப்பொழுதும் ஒளிமிக்கு விளங்கிக்கொண்டிருக்கும்.

*7-11 :* மேகங்கள் கடல்நீரை உண்டு கருக்கொள்ளும். கருக்கொண்டவுடன் குளிர்ந்து காணப்படும். வறிய மேகமும் நீருண்டு கருக்கொண்ட மேகமும் விண்ணில் படரும். இந்த மேகங்களால் உண்டாகும் இருளைப் பகலில் சூரியனும், இரவில் சந்திரனும் அகற்றுகின்றன. கார்காலத்திலே மேகங்கள் இடி மின்னல்களுடன் பெரும் மழையைப் பொழிகின்றன. அதனால் காட்டில் உள்ள மரங்களெல்லாம் மிக்க செழிப்பினை அடைகின்றன. அந்த மரங்களிலுள்ள பூக்கள் மலர்ந்து மணம் வீசுகின்றன. அம்மலர்களில் உள்ள தேனை உண்டு வண்டுகள் ஒலிசெய்கின்றன. அங்கு வீசும் குளிர்காற்றால் மலர்களின் மணம் காடு முழுதும் பரவுகிறது. அங்குள்ள மலர்களுள் சிறந்து விளங்கும் வெண்கடம்பின் பூவே ஸ்ரீ முருகப்பெருமானுக்குரியது. கடப்பமரம் அடி பெருத்திருக்கும். பல கிளைகள் காணப்படும். கிளைகள் யாவும் தழைத்து

5. செறுநர் - பகைவர். உறழ் - ஒத்த. செல் - இடி. 7. கார்கோள் – கடல். கமம் - முதிர்ந்த. 8. போழ் – அழித்தல். வள் உறை - பெருந்துளிகள். 9. தலைஇய - பெய்து.

இருள்படப் பொதுளிய பராஅரை மராஅத்(து)
உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பில்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோள்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்

---

அழகிய பூங்கொத்துக்களுடன் பொலிவுற்றுக் காட்சி அளிக்கும். அம்மரத்தினடியிலிருந்தால் அவ்விடம் முழுவதும் இருள் சூழ்ந்ததுபோன்ற காட்சி காணப் படும். அடியார்கள் அக்கடம்ப மலர்களை எடுத்துத் தேரின் சக்கரங்களைப்போல உருண்டைவடிவில் அழ கிய மாலைகள் தொடுப்பார்கள். அம்மாலைகளை முருகப் பெருமானுடைய மார்பில் அணிவித்து மகிழ்வார்கள். அம்மாலைகள் பெருமானது மார்பில் எப்பொழுதும் அசைந்துகொண்டிருக்கும். இவ்வழகிய காட்சியைக் கண்டு அன்பர்கள் களிப்பார்கள் ; வணங்குவார்கள்.

*12 - 17 :* மலைகள் விண்ணுலகம்வரை உயர்ந்து வளருகின்றன. அந்த மலைக்குமேல் மிகவும் உயர்ந்து வலியுடைய மூங்கில்கள் வளர்கின்றன. அத்தகைய உயர்ந்து ஓங்கி விளங்கும் மலையில் சிறிய கால்களை யுடைய பெண்கள் கிண்கிணி என்னும் சிறு சதங்கை கோத்த சிலம்பினை அணிந்துள்ளார்கள். அவர்களது கால்கள் இரண்டும் திரண்டு உருண்டு காணப்படு கின்றன. அந்தப் பெண்களது இடையோ மிகவும்

10. பட - மிகும்படியாக. பொதுளிய - தழைத்தோங் கிய. மராஅத்து - வெண்கடம்பினது. 12. நிவந்த - ஓங்கி வளரும். வரை - மூங்கில். 13. கவைஇய - சூழ்ந்த.

பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்
கைபுனைந் தியற்றுக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோர் ஆய்ந்த இணையீ ரோதிச்

---

வளைந்து ஒடுங்கி மெலிவு உடையதாய்க் காணப்படுகிறது. அவர்களுடைய தோள்களோ மூங்கிலைப் போல உருட்சியாகக் காணப்படுகின்றன. அந்தப் பெண்கள் இடையில் செந்நிற ஆடை உடுத்தியுள்ளார்கள் அவ்வுடைகள் இயல்பான இந்திரகோபப் பூச்சியின் நிறத்தினை ஒத்து விளங்குகின்றன. அந்த ஆடைகள் பூவேலைகள் உடையதாய்க் காணப்படுகின்றன. தம்முடைய அரையில் மணிகள் சரஞ்சரமாகத் தொங்குகின்ற சிறந்த அல்குலையுடையவர்கள். மேலும், அவர்கள் இயற்கையாகவே மிக்க அழகுடையவர்களாகவும் காணப்படுகிறார்கள்.

*18 - 22 :* சாம்பூனதம் பொன்னில் சிறந்தது. அப்பொன்னாலாகிய நல்ல ஆபரணங்களை அவர்கள் அணிந்திருப்பர். அவர்களது உடற்பொலிவு போற்றற்குரியது. முகம், மேனி இவற்றின் அழகு ஒன்று சேரவே அவர்களுடைய அழகு மேலும் பொலிவு பெற்று விளங்குகிறது. இத்தகைய சூரரமகளிரை விரும்பாதார் யார்? அவர்கள் தங்கள் தோழியரால் பின்னப்பட்ட நீண்ட சடையுடையவர்கள். அதனை

16. நிரைத்த - கோத்த. சில் காழ் - ஏழு வடங்கள். 17. கவின் - அழகு. 19. செயிர் - குற்றம். 20. துணையோர் - தோழிப்பெண்கள். ஓதி - கூந்தல்.

செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்

---

அவர்கள் ஈரி வகிர்ந்தும் அழகுபடுத்தியுள்ளார்கள். அவர்கள் பின்னிய சடைகளுக்கு இடையில் வெட்சிப் பூக்களின் உதிர்ந்தமலர்கள் காணப்படுகின்றன. கரிய கூந்தலில் சிவந்த காம்புகளையுடைய வெட்சிப்பூக்களை விடுபூக்களாகத் தூவிக்கொண்டும் உள்ளார்கள். அதனுடன் அத்தோழியர்கள் நடுநடுவே பசிய காம்பினையுடைய குவளைப்பூவின் இதழ்களைத் தனித்தனியாகக் கிள்ளிவைத்துக் கூந்தலை அழகுபடுத்தியுள்ளார்கள்.

*23 - 36 :* மேலும் தலைப்பக்கத்தின் பின்புறத்தே நடுவில் கூந்தலின்மேல் சிதேவி என்ற தலைவில்லை தரித்துள்ளார்கள். சடையின்கீழ் வலம்புரி வடிவத்திலுள்ள சிறிய திருகுவில்லையும் அணிந்துள்ளார்கள். நெற்றியில் பொட்டிட்டுக்கொண்டுள்ளார்கள். அச்சாந்து நறுமணம் உடையதாக உள்ளது. அதனால் அவர்கள் நெற்றியில் மணம் வீசிக்கொண்டிருக்கும். அன்றியும், பொட்டுக்குமேல்சுறுமீனினது பிளவுபட்ட வாயைப்போன்ற தலைக்கோலம் அணிந்துள்ளார்கள். இவ்வாறு செய்வனசெய்து அலங்கரித்துக்கொண்டு,

23. வயின் - இடம். 24. தைஇய - இட்ட. தேம் - மணம். 25. மகரம் - சுறுமீன். பகு - பிளந்த. மண்ணுறுத்தல் - அலங்கரித்தல்.

பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்(டு)
உளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்(பு)
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்

---

முடிந்துகொண்ட கொண்டையுடையவர்கள். அந்தக் கொண்டையின்மேல் குளிர்ந்த சண்பகப்பூக்களையும் செருகியுள்ளார்கள். அந்தப் பூக்களுக்குமேல் மருக்கொழுந்தின் இலைகளைச் சூடிக்கொண்டுள்ளார்கள். அந்தக் கொழுந்து இலைகள் பூம்பஞ்சைப்போல மிக நுட்பமாயும் மென்மையாயும் இருக்கும். அவற்றுடன் அன்றலரும் மொட்டுக்களை வளைவாகத் தொடுத்துச் சூட்டி மகிழ்வர். அரும்புகளைப் பறித்து நீரில் அமுக்கி நனைத்து வைப்பர். அசோகின் தளிரினைத் தங்கள் காதுகளில் செருகிவைத்து மகிழ்வர். அவ்வாறு காதுகளில் அணிந்த அசோக இதழ்களின் நுனிகள் அவர்கள் மார்பினிடமாக அசைந்துகொண்டிருக்கும். மேலும் மார்பில் வேலைப்பாடு அமைந்த பொன்னாபரணங்களை மிகுதியாக அணிந்திருப்பார்கள். அவைகள் சிறந்த விலை மதிப்பும் வேலைப்பாடும் உடையவை. மருதம்பூவின் இதழ் மிகவும் மழமழப்பாக இருக்கும். அதை நீரில் தடவி மார்பில் ஒட்டிக்கொண்டால் குளிர்ச்சியைத் தரும். அதன்பொருட்டு அவர்கள் சந்தனக்குழம்பை வாசனை கலந்து மார்பில் அப்பிக் கொள்வர். சந்தனக்குழம்பின்மேல் வேங்கைப்பூவின்

27. செரீஇ - செருகி. 28. இணர் - இதழ். அட்டி - இட்டு. 30. இணைப்புறு - சேர்த்துக்கட்டிய. பிணையல் - மாலை. வளைஇ - வளைவாக. 31. பிண்டி - அசோகு.

நுண்பூண் ஆகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தா தப்பிக் காண்வர
வெள்ளின் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளிர் ஆடுஞ் சோலை

---

நுண்ணிய மகரந்தத்தை அப்பிக்கொண்டுள்ளார்கள். இத்தகைய சிறப்பும் அழகும்பெற்ற கோங்கினது குவிந்த அரும்பினைப்போன்ற கொங்கைகளையுடையவர்கள் அப்பெண்கள்.

*37 - 44 :* அப்பெண்கள் விளாமரத்தின் சிறிய தளிர்களைக் கிள்ளி ஒருவர்மேல் ஒருவர் வீசிக்கொள்வார்கள். அவர்கள் என்றும் முருகனை வழிபடுவர்; வாழ்த்துவர். அப்பெருமானுடைய கோழிக்கொடியினிடத்து அவர்கட்கு மிக்க அன்பு உண்டு. அதனால் அதனை உளமார வாழ்த்துவார்கள். கோழி போரில் தோல்வியுறாது. இவ்வாறு வாழ்த்தித் தெய்வமகளிர் கூடிச் சிறப்பு விளங்க மலையினிடமெல்லாம் ஆடினார்கள். அத்தகைய சோலைகள் பல சூழ்ந்த வளம் மிக்க

32. காழ் - வைரம். 33. குறடு-மரத்துண்டு. உரிஞ்சிய-உரைத்த. தேய்வை - சந்தனக்குழம்பு. 34. கடுப்ப - ஒப்ப. 37. வெள் - விளாமரம். குறு - சிறிய. முறி - தளிர். 40. சிலம்பு - மலை. சிலம்ப - எதிரொலிசெய்ய. 41. அரமகள் - தெய்வப்பெண். சூர் - அச்சம்.

மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்
உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கின்

---

மலையிடமாகும். இவ்வாறு மரங்களடர்ந்திருப்பதால் அம்மரங்களின் வளர்ச்சி குரங்குகளைப் பீதியடையச் செய்தன. அவற்றுடன் வண்டு கிண்டாத காந்தள் மலரும் நிறைய உண்டு. நெருப்புப்போன்ற செந்நிற முடைய அப்பூவாலான அழகியமாலை முருகனது திரு முடியில் விளங்கிக்கொண்டிருக்கும்.

*45 - 61 :* நிலம் முற்றப்பெற்ற குளிர்ச்சிமிக்க கடல் தன் நிலைகுலையும்படி வேலாயுதம் கடலுக்குள் பாய்ந்தது. சூரபன்மாவாகிய தலைவனைக் கொன்றது முருகனது வேல். அவ்வேல் இலையைப்போன்று இருந்தது.

பெண்பேய்கள் தங்கள் காய்ந்த மயிரினை விரித்து ஆடுகின்றன. பற்கள் பருத்தும் நீண்டும் ஒன்றை ஒன்று ஒவ்வாதுள்ளன. பிணம் தின்னும் இயல்பின ஆதலால், பெரிய வாயினைப்பெற்று விளங்குகின்றன. அந்தப் பேய்களின் கண்கள் எப்பொழுதும் சுழன்று

43. மூசா - மொய்க்காத. 44. கண்ணி - மாலை. மிலைந்த - சூடிக்கொண்ட. 45. பார் முதிர் - பழமையான நிலம். 47. உலறிய - காய்ந்த. பிறழ் - ஒழுங்கற்ற. 48. சூர்த்த - கொடுமையான.

கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்குங் காதிற் பிணர்மோட்(டு)
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி ஆடிய கூருகிர்க் கொடுவிரல்
கண்தொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்டொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாயள் துணங்கை தூங்க

---

கொண்டே இருக்கும். கண்கள் கோபத்தை நன்றாக விளக்குகின்றன. அதனால் அந்தப் பேய்களின் கண் பார்வை கொடுமை மிகுந்து காணப்படுகின்றது. பேய்களின் தோளில் ஒருபக்கம் கண் பிதுங்கிய ஆந்தையும், கொடிய விடமுள்ள பாம்பும் தொங்குகின்றன. அவற்றின் காதுகளோ மிகப் பெரியவை. அக்காதுகள் மார்பில்வந்து அலைக்கின்றன. பேய்கள் பெரிய உடலையும் வயிற்றையும் பெற்று விளங்குகின்றன. கண்டார் எண்ணிப்பார்க்கும் நடையுடையன. அதனைப் பார்ப்போர் அஞ்சுந்தன்மை மிக்க பேய்மகள் அவுணர்களின் கண்களைப் பிடுங்கித் தின்றார்கள். அவர்கள் நகங்கள் ரத்தம் தோய்ந்தனவாய்க் காணப்படும். கைகளிலும் ரத்தக்கறை காணப்படும். செத்த உடல்கள் நாறுகின்றன. அவற்றையும் பொறுத்துக் கொண்டு, அவர்களது தேகத்தைப் பிடுங்கித் தின்கின்றன. பின்னர், சிறிது நிணத்தைத் தங்கள் கைகளில் வைத்துக்கொண்டிருக்கின்றன. அப்போது

49. கழல் கண் - பிதுங்கிய கண். கூகை - ஆந்தை. 50. பிணர் - இரத்தம். மோடு - வயிறு. 52. உகிர் - நகம். 53. தொட்டு - தோண்டி.

இருபே ருருவின் ஒருபே ரியாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழிணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்(து)
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை யாயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப

---

முருகனது திருவருளை எண்ணுகின்றன. எண்ணித் துணங்கைக் கூத்து ஆடுகின்றன.

இச்சிறப்பினையுடைய முருகன், மக்கள் வடிவும் விலங்கு வடிவுமாகிய (குதிரைத் தலை, மனித உடல்) இரண்டுபெரிய வடிவங்களுடன் சூரன்தோன்ற, அத்தகைய பெரிய வடிவத்தை அழித்து, ஆறாகிய வேறுபட்ட கூற்றாலே அச்சம் தோன்ற மிக்குச்சென்று, அசுரர்களின் பரம்பரையே அற்றுப்போம்படி, யாவர்க்கும் அச்சம் தோன்றும்படி கீழ்நோக்கின பூங்கொத்துக்களை உடைய மாமரவடிவமாக நின்ற சூரனைக் கொன்றான். இத்தகைய குற்றமில்லாத வெற்றியும், ஒருவராலும் அளவிட்டறிய முடியாத புகழினையும் உடைய செவ்விய வேலை உடையவன் முருகன்.

*62 - 77 :* உண்மை அறிவால் அறிதலைக் கைவிட்டுத் தங்கும் திருவடி; அவ்வடியே வீடாயிருக்கும். அத்திருவடியில் செல்லுதற்குக் காரணமான நல்ல வினைகளைப் பற்பல பிறப்புக்களிலும் நல்லெண்ணம்

60. மா - மா மரம். 63. புலம் - உள்ளம்.

இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயின்

---

மிக்கோராய்ச் சிறந்தமனத்தோடு முருகனை வணங்கச் செல்லும் விருப்பமுடையையானால் கூறுவன் கேள். நீ முற்பிறப்பில் எண்ணிச்செய்த நல்வினையின் மிகுதியினாலே இனிய வீடுபேற்றை இப்போதே தவறாது பெறுவாய். மிக நீண்டு உயர்ந்த கோபுரத்துச்சியின் மேலே கோழிக் கொடி வீசுகிறது. போர்க்கருவிகள் யாவும் பயனற்றுக் கிடக்கின்றன. நூலால் புனையப் பட்ட பந்தும் பாவையும் (பொம்மை) இப்போது விளையாடுவாரின்மையின் வாளா கிடக்கின்றன. காரணம் போர் நின்றுவிட்டது. அதனால் எந்தக் காலத்தும் போர்செய்வார் இல்லாத வாயிலைப் பெற்றுள்ளது. பல கடைகள் தோன்றியுள்ளன. இலக்குமி நடமாடத் தொடங்கிவிட்டாள். மாட மாளிகைகள் நிறைந்த தெருக்களையுடைய மதுரையின் மேற்குத்திசையிலே திருப்பரங்குன்றம் உளது. அந்தக் குன்றம் நீர்வளம் நிலவளமிக்கது. சுனைகள் அங்கு அதிகம். தாமரையும், நெய்தலும் பிற பூக்களும் அங்கு அதிகமாகக் காணப்படுகின்றன. நன்செய்நிலம் அதிகம். வயல்கள் கருஞ்சேறுபெற்று விளங்குகின்றன. அவ்வயல்களில் முட்கள் நிறைந்த தண்டுகளையுடைய தாமரை மலர்கள் வளர்கின்றன. அம்மலரின் நறுமணம் ஊர்

71. மறுகு - தெருக்கள். கூடல் - மதுரை.

இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முட்டாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந் துறைதலும் உரியன், அதாஅன்று;

## திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்

---

முழுதும் வீசுகிறது. அத்தாமரைமலர்களில் வண்டுகள் தமது இராக்காலத்தைக் கழிக்கின்றன. விடியற் காலத்தில் வேறு சுனைகளில் முளைத்துள்ள நெய்தற் பூக்களின் தேனைக் குடைந்து ஊதிச்சென்று எடுத்து உண்கின்றன. இன்னும் அங்குள்ள பற்பல சுனைகட்கும் சென்று அங்கங்கே மலர்ந்துள்ள பூக்களிலுள்ள தேனை உண்டு ஒலிசெய்கின்றன. இத்தகைய வளம் நிறைந்தது அத்திருப்பரங்குன்றம். அக்குன்றத்தில் முருகப்பெருமான் விரும்பி உறைகின்றான். அதுவும் அல்லாது;

*78 - 83 :* யானைப்பாகன் யானையின் மத்தகத்தில் தன் கையிலுள்ள கூரிய அங்குசத்தால் குத்திப் புண்பட்ட மத்தகத்தினிடத்தே சிறந்த பொன்னரி

74. எல் - சூரியன். 75. காமர் - அழகிய. 76. அரிக் கணம் - வண்டின் கூட்டம். 78. வை - கூரிய. நுதி-அங்குசம். பொருத - வெட்டின. வரி - புள்ளி. நுதல் - மத்தகம். 79. வாடாமாலை - பொன்னரிமாலை. ஓடை - பட்டம். துயல்வர - அசைய.

படுமணி இரட்டும் மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பின்
கால்கிளர்ந் தன்ன வேழம் மேல்கொண்(டு)
ஐவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுறழ் இமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ [குழை
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்

---

மாலையும், பட்டமும் தொங்கி அசையும். யானையின் தலையிலுள்ள மகுடம் பொன்னாலும் மணிகளாலும் ஆகியது. அது மிக்க ஒளியைத்தரும். யானை கடிய நடையை உடையது. இயமனை ஒத்துப் பிறரால் தடுத்தற்கரிய வல்லமை உடையது. காற்றுச் செல் வதை ஒத்த தன்மை உடையது. அத்தகைய யானை மேலேறி ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையும் செய்யும் தொழிலெல்லாம் முற்றச்செய்யப்பட்டதும் ஆகிய,

8 .88 : முருகப்பெருமானின் முடியில் மகுடம் உள்ளது. அந்த மகுடத்தின் ஒளி நாற்புறத்திலும் வீசுகின்றது. அந்த ஒளி மின்னலோடு மாறுபட்ட தனி விளக்கத்தைப்பெற்றுள்ளது. அவ்வொளியினை விட்டு நீங்காத விண்மீன்களைப் போன்று காதினில் பல அணிகள் சிறந்து விளங்குகின்றன. இந்த ஒளி எதற்கு ஒப்பாகும் என்றால் நெடுந்தூரத்தேயிருந்து விளங்கும் ஒளியுள்ள சந்திரனைவிட்டுநீங்காத மீன்கள் போல விளங்குவனவாய் ஒளியைக்கொடுத்தன.

85. உறழ் - போல. 86. நகை - ஒளி.

தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாள்நிற முகனே
மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம் ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே ஒருமுகம்
எஞ்சிய பொருளை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே ஒருமுகம்

---

*89 - 98:* விரதங்களையுடைய தவத்தில் வல்லவர்கள் வருத்தங்களைப் பொருட்படுத்தாது இறைவன் திருவருளைநாடிச் செல்வார்கள். தவத்தினரின் அகக் காட்சிக்கும் புறக்காட்சிக்கும் முருகப்பிரான் தனது ஒளிமிக்க உருவத்தைக் காட்டுவான். உடனே அவனுடைய ஆறுமுகங்களும் தோன்றும். ஒருமுகம் இந்த உலக இருளை அகற்றவல்ல அருளொளியை அள்ளி வீசும். மற்றொரு முகம் முருகனை எண்ணி வழிபடும் அடியார்களோடு உவப்புடன் கலந்து உறவாடிக் களிக்கும். அவ்வடியார்கள் வேண்டிய வரத்தையும் கொடுக்கும். மூன்றாவது முகம் வேள்விகளை ஓம்பி வளர்க்கும் செயலில் ஈடுபடும். அந்தணர்கட்கு எவ்வித இடையூறுகளும் நேரிடாதபடி பாதுகாக்கும். நான்காவது முகம் வேதங்களிலும் நூல்களிலுமுள்ள பொருள்களை ஆராய்ந்து முனிவர்கட்கு உணர்த்திச் சந்திரன் போல எல்லாத்திசைகளையும் விளக்கும்.

89. தாவு - வருத்தம். 97. ஏம் - இன்பம்.

செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக் [முகம்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே ஒரு
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே ஆங்கம்
மூவிரு முகனும் முறைநவின் றொழுகலின்
ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்
விண்செலல் மரபின் ஐயர்க் கேந்திய தொருகை
உக்கஞ் சேர்த்திய தொருகை

---

*99 - 103 :* ஐந்தாவது முகம் நடுவு நிலைமையில்லாத அசுரர்களை அழித்துஅவர்களது வழிமுறையே இல்லாமற் செய்தது. அதனல் இம்முகம் என்றும் போர்க்களத்தை நாடியேயிருக்கும். கடைசி முகம் தேனினும்பாகினும் இனிய சொல்லையுடைய தினைப் புனம் காக்கும், சிற்றிடை சிறுநகை ஆகியவைகளை உடைய வள்ளிநாயகியுடன் என்றும் கூடி மகிழ்ந் திருக்கும். இங்ஙனம் ஆறுமுகங்களும் தனித்தனியே தம்தம் தொழில்களைச் செய்துகொண்டிருக்கும்.

*104 - 118 :* முருகனுடைய மார்பில் மாலைகள் தொங்கும். அவனுடைய திருமார்பில் ரேகைகள் உண்டு. அவ்விரேகைகள் நீண்டு படர்ந்து அவனது தோள்வரையிலும் விளக்கமாகத்தெரியும். முருகனது தோள்கள் மிக்க வலிமையுடையன. வேலினைத்தாங்கி அரக்கர்களைக் கொல்லுவதற்கு வேண்டிய வலிமை

99. சமம் - போர். முருக்கி - கெடுத்து. 101. கறுவு - தீராதகோபம். 104.பகட்டு-பெருமை. 108.உக்கம்-இடுப்பு.

நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசைஇய
அங்குசங் கடாவ ஒருகை இருகை [தொருகை
ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப ஒருகை
மார்பொடு விளங்க ஒருகை
தாரொடு பொலிய ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப ஒருகை
பாடின் படுபணி யிரட்ட ஒருகை

---

தோள்களுக்கு உண்டு. முருகனுடைய தோளுக்கு இயல்பாகவே ஒளியும் புகழும் உண்டு என்கின்ருர். முருகனின் ஒருகை என்றும் முனிவர்களைப்பாதுகாக்க உள்ளது. முனிவர்களோ பேராற்றலுடையவர்கள். அம்முனிவர்கள் விண்ணிடை ஊர்ந்து செல்லுகின்ற ஆற்றலுமுடையவர்கள். எனவே சூரியன் வெப்பத்தை உயிர்கள் பொறுக்கமுடியாது என்று கருதி அருளினல் சுடரொடு திரிந்து அந்த வெப்பத்தைப் பொறுக்கின்ற முனிவரைப் பாதுகாக்கவே உலகத்தைத்தாங்கிக் காத்ததாயிற்று. மற்ருெருகை அதன் மருங்கு அசையாமல் இருக்கும். மூன்ருவது கை அவனது தொடைமீது வைக்கப்பட்டுள்ளது. மற்ருெருகை வில்லும் அம்பும் பற்றிக்கொண்டுள்ளது. பகைவர்களைக் காணுந்தோறும் அங்குசத்தைச் செலுத்திக்கொண்டிருக்கிறது. வேறு இருகைகள் கேடகத்தையும் வேலாயுதத்தையும் அசைத்துக்கொண்டே இருக்கின்றன. மற்ருெருகை மார்பிடத்தே பொருந்தி விளக்கமாகத் தோன்றும். வேருெருகை பெருமான்

109. கலிங்கம் - ஆடை. குறங்கு - தொடை. 110. கடாவ - பிடித்து. வட்டம் - கேடயம். 114. கொட்ப - சுழன்றுகொண்டிருக்கும்.

நீனிற விசும்பின் மலிதுளி பொழிய ஒருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட ஆங்கப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை நரல
உரந்தலைக் கொண்ட உருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ

---

அணிந்துள்ள மாலைகளின் இடையே மிக அழகாகக் காணப்படும். பிறிதொரு கை மாலைகளோ, ஆடைகளோ இடம் பெயர்ந்தால் உடனே அவைகள் கீழ் விழாதபடித் தாங்கி இருக்குமிடத்திலே வைக்கும். மற்றொரு கை மேகத்திடையிருந்து நீர்த்துளிகளைப் பெற்றுத் தூவிக்கொண்டேயிருக்கும். கடைக்கை தெய்வமகளிர்க்கு மணமாலை சூட்டுந்தொழிலை மேற்கொண்டுள்ளது. இவ்வாறு முருகனுடைய பன்னிரு கைகளும் தனித்தனியே தத்தமக்கு உரியதொழில்களைச் செய்துவருகின்றன.

*119 - 125 :* விண்ணிடையே துந்துமியென்னும் வாத்தியங்கள் ஒலிசெய்ய, திண்ணிய வயிரமுடைய கொம்பு மிக்கு ஒலிக்க, வெள்ளிய சங்கு முழங்க, இடிபோன்று முரசுஒலிசெய்ய, முருகனுக்கு வழிபாடு நாள்தோறும் நடத்தப்படுகிறது. பல புள்ளிகளையுடைய மயில் தோகையைவிரித்து ஒருபக்கத்தே ஆடுகிறது. வெற்றிதரும்கோழி கொடியிலேயிருந்து அகவுகிறது.

119. பல்லியம் - துந்துமி என்னும் இசைக்கருவி. 120. நரல - ஒலிசெய்ய. 121. உரம் - வலிமை. 122. பொறி - புள்ளி. மஞ்ஞை - மயில். அகவ - ஒலிக்க.

விசும்பா ருக விரைசெலல் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே
[அதா அன்று;

## திருவாவினன்குடி

சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கும் யாக்கையர் நன்பகல்
பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு

---

*இந்நிலையில் விண்வழியே சென்ற முருகப்பெருமான் திருச்சிரலைவாயின் சிறப்பினைக்கண்டு அங்குத் தங்கி அருள்செய்ய இசைந்தான். அதுவன்றி,*

*126 - 137 :* மரவுரிதரித்த முனிவர்கள் அழகும் குணமும் உடையவர்கள். வலம்புரிச்சங்கினை ஒக்கும் வெள்ளிய நரைத்த முடியை உடையவர்கள். வயது முதிர்ந்தவர்கள். உடம்பில் அழுக்கு என்பதே இல்லாதவர்கள். என்றும் நீராடி அழுக்கினைப் போக்கிவிடுவார்கள். மான்தோலைப் போர்த்திக்கொள்பவர்கள். பலநாள் உணவில்லாமல் விரதமிருப்பதால் மெலிந்த உடல்பெற்று எலும்புக்கூடாகவே காட்சிதருபவர்கள். மாறுபாடும் கோபமும்நீக்கிய மனத்தினையுடையவர்கள். காமம் அவரிடத்து அஞ்சும். பலவற்றையுங்

*126.* சீரை – மரவுரி. *127.* புரையும் - ஒத்த. வால் – வெண்மை. *129.* உரிவை – தோல். *131.* இகல் - பகை.

செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர் இடும்பை
யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசில் தூவுடை
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர

---

கற்றவர்களுக்குத் தாம் எல்லையாகிய தலைமையுடையவர்கள். இத்தகைய உயர்ந்தவர்கள் மனவருத்தம் என்பதையே அறியாதவர்கள். தவத்தினாலே மெய் வருத்தம் அடைவார்கள். இத்தகைய, எவருடனும் வெறுப்பில்லாத நல்ல அறிவினையுடைய முனிவர்கள் முன்னேசெல்ல.

*138 . 147 :* புகையேறினாலொத்த அழுக்கேறாத தூய ஆடை உடையவர்கள். மொட்டு மலராத மலர் மாலையணிந்த மார்பினை உடையவர்கள். அவர்களது கையில் உள்ள யாழ் மிக்க வேலைப்பாடுடையது. மிக நுண்ணிய நரம்புகளைப் பெற்றது. இனிய ஓசையைத்

132. செற்றம் – கோபம். 'பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம்' என்பர் நச்சினார்க்கினியர். 134. வரம்பு– எல்லை. 135. 'கோபத்தின் பின்னாகச் சிறிதுகாலம் நிற்பது சினம்' என்பர். 137. துனி – வெறுப்பு. காட்சி – அறிவு. 141. நயன் – அன்பு.

நோயின் றியன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலையர் இன்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குல்
மாசில் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்(று)
அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு

---

தருவது. என்றும் பசித்தே உண்பதால் மக்களுக்கே உரிய நோயில்லாத உடம்புடையவர்கள். அவர்கள் உடம்பு மாந்தளிர்போல விளங்கிக்கொண்டிருக்கும். அவர்களது இடுப்பின்கிழே பொன்னுரை போன்ற துத்திகள் காணப்படும். கண்ணுக்கினிய பதினெண் வகையாகிய மேகலை அணிந்த இடையை உடையவர்கள். குற்றமின்றி விளங்குபவர்கள். இத்தகைய குணங்கள் நிறைந்த கந்தருவமகளிர் பின்தொடர,

*148 - 151 :* நஞ்சு உறைக்குள்ளேகிடக்கும் துளையினை உடைய வெள்ளிய பல்லையும், (பாம்பின் பல், காளி, காளாத்திரி, யமன் யமதூதியென நான்காம்) நெருப்புப்போன்ற மூச்சினையும், கண்டவர்க்கு அச்சம் கொடுக்கும் கடிய வலியினையுமுடைய பாம்பு படும்படி அடுக்கும் பலவரியினையும் வளைந்த சிறகுகளையும் உடைய கருடனை அணிந்த நீண்ட கொடியினையுடைய திருமாலும்,

148. தூம்பு - துளை. வால் - வெண்மை. 169. கடும் - கொடிய. 150. பட - அழிய. 151. புள் - கருடன்.

வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்(து)
ஈரிரண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்

---

*152 - 154 :* வெற்றிக்களத்தே வெள்ளிய இடபத்தினை வெற்றிக்கொடியாக உடுத்த உருத்திரன், இறைவியை ஒருபாகத்தேகொண்டு விளங்குகின்ற செல்வன், இதழ்குவியாத மூன்று கண்ணினையுடைய செல்வன், அவனே முப்புரத்தை எரித்த மாறுபாடு மிக்க செல்வன் ஆவான். சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றும் இறைவனுக்கு மூன்று கண்கள்.

*155 - 159 :* ஆயிரம் கண்களையுடைய இந்திரன் நிற்க, அவனே நூறு யாகங்களை முறைப்படிச்செய்து முடித்த பெருமையினன்; பகைவர்கட்கு அஞ்சாது அவர்களைக் கொன்று வெற்றிபெறுபவன்; தலைகளில் ஏந்திய நான்கு கொம்பையும், அழகிய நடையையும், நிலத்தில் புரளும் பெரிய வளைந்த கையினையுமுடைய எல்லாராலும் உயர்த்திச் சொல்லப்படும் ஐராவதம் என்னும் யானையின் கழுத்தில் ஏறிய செல்வம் மிக்கு விளங்குபவன் இந்திரனே.

**152.** வலன் - வெற்றி. **154.** மூவெயில் - திரிபுரம். முருக்கிய - எரித்த. **155.** நூற்றுப்பத்து – ஆயிரம். நாட்டம் - கண். **159.** எருத்தம் - பிடரி. செல்வன் – இந்திரன்.

நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகங் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
ஏமுறு ஞாலந் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவில் ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்
பகலிற் றோன்றும் இகலில் காட்சி

---

*160-162:* நான்காகிய பெரிய தெய்வத்தையுடைய நன்றாகிய ஊர்கள் நிலைபெற்ற உலகத்தைக் காக்கும் ஒரு தொழிலையே விரும்பிய கோட்பாடாக உடைய செல்வன்(திருமாலுக்குச் சேர்க்க). (நாற்பெரும் தெய்வம் ஆவன : இந்திரன், யமன், வருணன், சோமன்) பலராலும் புகழப்படுகின்ற அயன், அரி, அரன் என்னும் மூவரும் தத்தமக்குரிய தொழில்களை முன்போல நிகழ்த்தித் தலைவராகவேண்டி,

*163-170:* பிள்ளையார் * சபித்ததாலே மண்ணிடத்தே தோன்றி மயக்கமுறுகின்ற நான்கு முகத்தையுடைய பிரமனைப் பழைய நிலையிலே நிறுத்தக் கருதி திருமாலுடைய திருவுந்தித்தாமரை பெற்ற ஊழிகள் தோறும் தன் படைத்தற்றொழிலில் வருத்தமில்லாத

* பிள்ளையார் அசுரரை அழித்துத்தேவரைக் காத்தற்கு இந்திரன் மகள் தெய்வயானையை அவருக்குக் கொடுத்த இடத்தே பிள்ளையார் தன் கையில் வேலை நோக்கி 'நமக்கு எல்லாம் தந்தது இவ்வேல்' என்ன, அருகிருந்த அயன் இவ்வேலிற்கு இந்நிலை என்னால் வந்ததன்றோ என்றானாக, நம் கையில் வேலுக்கு நீ கொடுப்பது ஒருசத்தியுண்டோ என்று கோபித்து 'இங்ஙனம் கூறிய நீ மண்ணிடைச் செல்வாய்' என்ற சாபத்தை..

நால்வே றியற்கைப் பதினொரு மூவரொ(டு)
ஒன்பதிற் றிரட்டி உயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
உருமிடித் தன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவி னன்குடி அசைதலும் உரியன் அதாஅன்று;

---

ஒருவன் அழகு தோன்ற ஒரு பொருள் பலவாமாறு பகுத்துக் காண்டற்கண் வேறுபடத் தோன்றும் தம்முள் மாறுபாடில்லாத அறிவினையுடைய நான்காகிய வேறுபட்ட இயல்பினையுடைய முப்பத்துமூவரும் பதினெண்வகையாகிய உயர்ந்த நிலையைப் பெற்றவரும், உடுக்கள் பொலிவுபெற்றுத் தோன்றினால் ஒத்த தோற்றத்தை உடையராய், மீன்கள் உலாவுகின்ற இடத்தேசேர்ந்து காற்று எழுந்தாலொத்த செலவினை உடையராய்,

*171 - 176 :* காற்றினிடத்தே நெருப்பெழுந்தால் ஒத்த வலியினையுடையராய், நெருப்புப்பிறக்க உருமேறு இடித்தாற்போன்ற குரலினையுடையராய், தம்முடைய சீரிய படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் தொழில்களைப் பண்டுபோலப் பெறும்முறைமையினைக் குறைவேண்டிநின்று பெறுங்கூற்றாலே முடித்துக் கோடற்கு ஆகாயத்தே சுழற்சியினையுடையராய்,

173. உறு குறை - உற்ற குறை.

## திருவேரகம்

இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅ(து)
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி இளமை நல்லியாண்(டு)
ஆறினிற் கழிப்பிய அறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்(து)
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல

---

சேரவந்து காணும்படியாக வருத்தமில்லாத அருங் கற்பினையுடைய தெய்வயானையாருடன் ஆவினன்குடி யென்னும் ஊரிலே சிலநாள் இருத்தலுமுரியன்.

*177 - 182:* ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்னும் ஆறாகிய நன்மைமிக்க இலக்கணத்தில் வழுவாமல் தாயும் தந்தையுமாகிய இருவர் குலத்தையும் உலகத்தார் நன்றென்றுமதித்த பலவாய் வேறுபட்ட பழைய குடியிலேபிறந்த இருபிறப்பாளர் இருபத்துநான்கின் இரட்டியாகிய நாற்பத்தெட்டுயாண்டு நல்லிளமையை வேதங்கூறிய நெறியிலே போக்கிய இருபிறப்பாளர் பிரமசரியங்காத்த அந்தணர் அறத்தை எப்பொழுதும் கூறுகின்ற கோட்பாட்டினையும், நாற்சதுரமும் முச்சதுரமும் வில்வடிவுமாகிய மூன்றுவகையைக் கருதின ஆகவனியம் தக்கிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்றுதீயாலுண்டாகிய செல்வத்தினையுமுடைய உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும், பின்பு ஒரு பிறப்புமாகிய

177. இருமூன்று - ஆறு தொழில்கள். 180. ஆறு - பிரமசரியம்.

ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்(து)
ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்(து)
ஏரகத் துறைதலும் உரியன் அதாஅன்று;

### குன்றுதோறாடல்

பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு

---

இருபிறப்பினையுமுடைய அந்தணர் தாங்கள் வழிபடும் காலமறிந்து தோத்திரங்களைக் கூற,

*183-189:* முந்நூற்கொண்டு முப்புரியாக்குதலின் ஒன்பதாகிய நூலைத் தன்னிடத்தேகொண்ட ஒரு புரி மூன்றாகிய நுண்ணிய பூணுநூலையும், நீராடுங்கால் தோய்க்கப்பட்ட ஆடை உடம்பிலே கிடந்து புலர உடுத்து (ஈரத்துடனே இருந்து வழிபடுதல் கூறிற்று) தலைமேலேவைத்த கையினை உடையராய்த் தன்னைத் துதித்து ஆறெழுத்தினைத் தன்னிடத்தே அடக்கி யிருக்கின்ற கேட்டற்கரிய மறைய உச்சரிக்கப்படும் மந்திரத்தை நாப்புடைபெயரும் அளவில் உச்சரித்து மணம்மிக்க பூவை எடுத்துப் பெரிதுமகிழ்ந்து ஏரகம் என்கிற ஊரிலே இருத்தலும் உரியன்; அதுஅன்றி,

*190-194:* பச்சிலைக்கொடியாலே நறுநாற்றத்தை யுடைய காயை(சாதிக்காய்)நடுவிலிட்டுப் படிமத்தான்

186. அடக்கிய - வாய்க்குள்ளே உச்சரித்த.

வெண்கூ தாளந் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்

---

பொதிந்த புட்டில் போன்ற தக்கோலம் எனப்படும் காயைக்கலந்து, காட்டுமல்லிகையுடனே வெண்டாளியையும் சேர்த்துக் கட்டின கண்ணியை (மாலையை) உடையவனாய், நறுமணமுள்ள சந்தனம் பூசிய நிறம் விளங்கும் மார்பினையுடைய வேலன் கொடிய தொழிலையுடைய வில்லால் கொல்லுதலைச்செய்த குறவர்.

*195 - 205 :* நெடிய மூங்கிலில் இருந்து முற்றின தேனால் செய்த கட்டெளிவை மலைநாட்டுச் சிறிய ஊரில் இருக்கும் குறவர்கள் சுற்றஞ்சூழ உண்டு மகிழ்வார்கள். பின் அந்நிலத்துக்குரிய தொண்டகமாகிய சிறு பறையின் தாளத்திற்கு ஒப்பக் குரவை ஆடுவார்கள். நறிய மணமுள்ள மலர்ந்த பூவினாலாகிய மாலையைத் தலையிலே அணிந்துகொள்வார்கள். அம்மாலை ஆழ்ந்த சுனையிலேபூத்த பூவாலாகிய வண்டு

192. வெண்கூதாளம்-வெண்தாளி. 193. கேழ்கிளர்-நிறம்விளங்கும். 195. அமை - மூங்கில். தேறல் – தெளிவு. 197. தொண்டகம்–ஒருவகைப்பறை. 199. குண்டு – ஆழம். கண்ணி - தலைமாலை. 200. இணைத்த – கட்டிய.

முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வாலிணர் இடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்தளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்

.....................

விழ்கின்ற கண்ணியாகும். இதழ் பறித்துக் கட்டின மாலையினையும், சேர்த்த கூந்தலினையும்கொண்டு தலையில் இலையினை அணிந்துள்ளார்கள். செம்மையான காலையுடைய மரத்து இடத்தனவாகிய வெள்ளிய கொத்துக்களை நடுவேவைத்து வண்டுகள் தேனை உண்ணும்படி தொடுத்த குளிர்ந்த அழகினையுடைய தழையை வடங்கள் திருந்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்து, மயில்போன்ற சாயலையுடைய மகளிரோடு இளமையும் ஒழுக்கமுமுடைய மகளிர் அனைவரும் முருகனை வழிபடுபவர்கள்.

*206 - 217 :* செம்மேனியன், சிவப்பு நிறமுள்ள ஆடையினை அரையில் உடுத்தியுள்ளான். அசோகின் தளிரைக் காதில் அணிந்துள்ளான். அரையில் கச்சு கட்டியுள்ளான். காலில் வீரக்கழல் காணப்படுகிறது. கழுத்தில் வெட்சிமாலையைச் சூடியுள்ளான். குழல் ஊதப்படுகிறது. கொம்பு ஊதப்படுகிறது. சிறிய வாத்தியங்களை முழக்குகிறார்கள். கிடாயைப் பின்னிட்டு

207. செயலை - அசோகு. 208. செச்சை – வெட்சி.

தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்
நரம்பார்த் தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கிற் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலும் நின்றதன் பண்பே
[அதாஅன்று;

---

மயிலின்மீது ஏறிக் குற்றமற்ற கோழிக்கொடியை உயர்த்தியுள்ளான். தான் எண்ணிய வடிவுகொள்ளுதலின் பிள்ளையாக இராது நீண்டு வளர்ந்துள்ளான். தனது தோளில் தொடி அணிந்துள்ளான். நரம்பு ஆரவாரித்தாற்போன்ற இனிய மிடற்றினையுடைய பாடு மகளிரோடே (இவர்கள் தன்னைச் சேவித்துப் பாடு மகளிர்) இடையில் இறுகக்கட்டிய உடையோடு மார்பினிடத்தின் மேலாக உடுத்த உடையும் உண்டு. தொங்கவிட்டமையால் நிலத்தைப் பொருந்திய நறிய மெல்லிய உடையினை உடுத்தி இத்தகைய மெல்லிய தோளினையுடைய பலவாகிய மான்பிணை போலும் மகளிர்பலர் குரவை ஆடி அசைய (இவர்கள் மெய் தீண்டி விளையாடுதற்குரிய மகளிர்) தன்னுடைய முழவையொத்த பெரிய கையினாலே அவர்கள் கையினைத்தழுவி எடுத்துக்கொண்டு முதற்கைகொடுத்து மலையிடந்தோறும் சென்று விளையாடுதல் என்பது தனக்கு நிலைநின்ற குணமாகும். அதுவன்றி,

210. தகர் - ஆட்டுக்கிடா. 213. குறும்பொறி - உதரபந்தம். சாயல் - மேனி.

## பழமுதிர்சோலை

சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறியயர் களனும்
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்

---

*218 - 226 :* சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்து வைப்பார்கள் பழங்கால மக்கள். அதற்குப் பிரப்பரிசி என்று பெயர். ஆட்டை அறுத்துப் பலி இடுவார்கள். பலியிடும் இடத்தில் கோழிக்கொடியை நிறுத்துவார்கள். இவ்வாறு ஊர்கள்தோறும் திருவிழாக்கள் மிகச் சிறப்பாக நடைபெறும். அவ்விடங்களிலெல்லாம் முருகப்பிரான் மனமுவந்து எழுந்தருளி இருப்பான். அன்புடையார் எங்கெங்கு வழிபடுகின்றார்களோ அங்கெல்லாம் அவன் இருப்பான். மேலும், படிமத்தானாகிய வேலன் இழைத்த வெறியாடுகின்ற களத்திலும், காட்டிலும், சோலையிலும், அழகுமிக்க ஆற்றிடைக்குறைகளிலும், ஆறுகளிலும், குளங்களிலும், வேறுபட்ட பலதரப்பட்ட ஊர்களிலும், நாற்சந்தி முச்சந்தி ஐஞ்சந்தி இவைகளிலும், புதிய மலர்களை உடைய கடம்பமரத்திலும், ஊரின் நடுவேயுள்ள

218. மறி - ஆடு. 219. வாரணம் - கோழி. 222 தைஇய - செய்த. 223. துருத்தி - திட்டு.

மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினும்
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி அப்பி ஐதுரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டுடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇத் தூவெள் அரிசி

---

மரத்தின் அடியிலும், ஊர் நடுவேயுள்ள பொது அம்பலத்திலும், பசுக்கூட்டங்கள் தங்கள் உடம்பைத் தேய்த்துக்கொள்ளும் தறிகள் உள்ள இடங்களிலும் முருகப்பிரான் இருத்தற்குரியன்.

*227 - 240 :* சிறப்பினையுடைய தலைமை மிக்க கோழிக்கொடியோடு பகைவர்களும் அஞ்சும்படிக் கோயிலை அமைத்து, நெய்யோடு வெண்சிறுகடுகும் அப்பி, தான் வழிபடும் உரிமையுடைய மந்திரத்தைத் தோன்றாமல் உச்சரித்து வழிபடுவார்கள். மலரைத் தூவுவார்கள். தம்மில் பகைமையான வடிவினையுடைய இரண்டு உடைகளை உள்ளொன்றும் புறம்பொன்றுமாக உடுத்து, சிவந்தநூலைக் கையிலே காப்பாகக்கட்டிக்கொண்டு வெள்ளிய பொறியைத் தூவுவார்கள். மிகுதியான வலியும் பெருமையும் உடைய காலினைக்கொண்ட கொழுத்த கிடாயினது இரத்தத்தோடே பிசைந்த வெள்ளரிசியைப் பலியாக இட்டுப்

226. பொதியில் - மரத்தின் அடியில். கந்து - தறிகள். 227. தலை – கோழி. 228. ஐயவி - வெண்சிறுகடுகு. ஐது - மெதுவாக. 229. குடந்தம்பட்டு - கைகூப்பி வணங்கி.

சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழிசை அருவியொ டின்னியங் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்

---

பல பிரப்பும் வைப்பார்கள். சிறிய பசுமஞ்சளோடே, நறுமணமுள்ள சந்தனம் முதலியவற்றையும் தெளிப்பார்கள். பெரிய குளிர்ந்த செவ்வரிமாலையையும் நறுமணமுள்ள வேறு மாலைகளையும் ஒப்பாக அறுத்துத் தமக்கு ஒப்பில்லாதபடி அசையத் தூக்கி, செறிந்த மலைப்பக்கத்தில் உள்ள நல்ல ஊர்களைப் பசியும், பிணியும், பகையும் நீங்குக என்று வாழ்த்தி நறுமணமுடைய தூபங்கொடுத்து அந்நிலத்திற்கு உரிய குறிஞ்சிப்பண்ணைப் பாடி முழங்குகின்ற ஓசையினையுடைய அருவியோடே இனிய பல்லியங்களும் ஒலிக்கச் சிறப்புற்றிருந்தது.

*241 - 244:* சிவந்த நிறத்தினையுடைய பல பூக்களையும் தூவுவார்கள். அச்சமுண்டாகும்படி இரத்தம் கலந்த சிவந்த தினையினையும் பரப்புவார்கள். குறமகள், முருகன் உவக்கும் வாத்தியங்களை வாசிக்கப்

234. இரீஇ - வைத்து. 236. கணவீரம் - செவ்வலரி. 237. தூங்கநாற்றி – தொங்கவிட்டு. 238. நகர் - சிற்றூர். 240. கறங்க - ஒலிக்க.

முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்
ஆடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலும் அறிந்த வாறே
ஆண்டாண் டாயினும் ஆகக் காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்

---

பண்ணி, தெய்வம் இல்லையென்பார் அஞ்சும்படியாகப் பிள்ளையார் வரும்படி முறைப்படுத்திய அச்சம் மிக்க அகற்சியையுடைய சிற்றூரின்கண்ணே சாந்திசெய்ய ஆற்றுப்படுத்தாள்.

*245 - 249:* அவ்வெறியாடும் களம் ஆரவாரிப்ப அதற்கு ஏற்பனவற்றைப் பாடிக் கொம்பு முதலாகிய வாத்தியங்கள் பலவற்றையும் ஒருசேர ஊதி, கொடிய மணியையும் ஒலிக்கச்செய்து, கெடாத வலிமையையுடைய பிணிமுகம் என்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்திக் காரியங்களை விரும்புவோர் தாங்கள் விரும்பின காரியங்களை விரும்பினாற்போலப் பெற்று நின்று வழிபட, அவ்வவ்விடத்தில் உறைந்ததையும் நான் அறிந்தபடியே கூறினேன்.

*250 - 254:* யான் மேற்கூறிய அவ்வவ்விடங்களிலேயாயினுமாகப் பிறவிடங்களிலே யாயினுமாக முற்பட நீ கண்டபொழுது அழகு தங்கியிருக்கும்படி

247. பூட்கை - மன உறுதி. பிணிமுகம் - யானை. 251. முந்து – நேரில்.

கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப்பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே

---

முகம் விரும்பித் துதித்து, கையைத் தலைமேல்வைத்து வாழ்த்தி, அவன் திருவடி தலையிலேறும்படித் தண்டனிட்டு, நீண்ட பெரிய இமயமலையின் உச்சியிலுள்ள தருப்பை வளர்ந்துள்ள பசியசுனையிடத்தே விசும்பும், வளியும், தீயும், நீரும், நிலனுமாகிய ஐவருள் தீ தன் அங்கையிலே ஏற்ப,

*255 - 269:* அருந்ததியொழிந்த அறுவராலே பெறப்பட்ட ஆறு வடிவுபொருந்திய செல்வன்; கல்லாலின் கீழிருந்த இறைவனது புதல்வன்; பெருமை மிக்க மலையரசன் மகளுடைய மகன்; பகைவர்க்குக்

254. சதாசிவன், மயேச்சுரன், உருத்திரன், அரி, அயன் ஆகியோர் பூதங்களுக்குத் தெய்வமாகலின் ஐவர் என்றார். ஐவருளொருவன் என்றது உருத்திரன் தெய்வமாகிய தீயை. அங்கையேற்ப என்றது இறைவனிடத்தினின்றும் இந்திரன் வாங்கிய கருப்பத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறைவன் கூறாகிய முத்தீக்குண்டத்தில் இட்டதனைக் கூறிற்று. 255. இது அங்ஙனம் அங்கியில் இட்டுச் சக்தி குறைந்த கருப்பத்தை முனிவரெழுவரும் வாங்கித் தம் மனைவியர்க்குக் கொடுப்ப அருந்ததியொழிந்தோர் விழுங்கிச் சூல் முதிர்ந்து சரவணப்பொய்கையில் பதுமப்பாயலிலே பெற, ஆறு வடிவமாக வளர்ந்தமை கூறிற்று. 256. ஆல் - கல்லால். கெழு - வீற்றிருந்த.

வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவில் தானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவில் ஒருவ பொருவிறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொல்மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ

---

கூற்றுவன்; வெற்றியை உலகத்திற்குக் கொடுக்கும் வன துர்க்கையினுடைய புதல்வன்; பூணணிந்த தலைமையினையுடைய காடுகிழாளுடைய குழவி; தேவர்கள் படைத்தலைவன் (தேவசேனாபதி); வளையும் வில்லையுடையோன்; இன்பந்தரும் மாலையணிந்த மார்பன்; எல்லா நூல்களையும் அறியும் புலவன் (அறிவுடையவன்); போர்த்தொழிலில் ஒருவனாக நிற்பவன்; பொருகின்ற வெற்றியையுடைய மள்ளன் (இளமைப் பருவமுடையோன்); நீ அந்தணர்களுடைய செல்வமாக இருப்பாய்; சான்றோரால் புகழ்ந்து சொல்லப்படும் சொற்களின் ஈட்டமாயிருப்பாய்; தெய்வயானை, வள்ளி ஆகிய மகளிர்க்குக் கணவன்; வீரர்க்கு இடபமானவன்; வேல் பொருந்திய பெரிய கையை உடையவன்; குருகாற் பெயர்பெற்ற (கிரவுஞ்ச) மலையைப் பிளந்த குறையாத வெற்றியையுடைய கிழவன்; தேவருலகைத் தீண்டும் நீண்ட வரைகளையுடைய குறிஞ்சி

259. பழையோள் - காடுகிழாள். 263. வெறுக்கை - செல்வம்.

பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக
நசையினர்க் கார்த்தும் இசைபே ராளா
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்
பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசில் எனப்பல

---

நிலத்துக்கு உரிமையுடையோன்; பலரும் புகழ்ந்து உரைக்கும் நல்ல சொற்களையுடைய புறச்சமயிகட்கு ஏற்றின் தன்மையுடையவன்; பிறரால் பெறமுடியாத முறைமையுடைய பெரும் பொருளுடைய முருகன். (பெயர் - பொருள் - விடுபேறு).

*270 - 279 :* வீட்டுலகினைப் பெறவேண்டுமென்று விரும்பி வந்தவர்கட்கு அதனை நுகர்விக்கும் பெரிய புகழினை உடையாய்; பிறரால் இடுக்கண்பட்டு வந்தவர்கட்கு அருள்கொடுக்கும் சேய்; மிகுந்த போர்களை முடித்த வலிய நினது மார்பினிடத்தே பொன்னாற் செய்த பெரிய அணிகலன்கள் காணப்படும். இரந்து வந்தோர்க்கு வேண்டுவன கொடுத்துப் பாதுகாக்கும் சிறப்புடைய நெடுவேள்; தேவரும் முனிவரும் துதிக்கும் பெரிய திருப்பெயரினையுடைய தலைவன்; போர்த் தொழிலில் மிகுந்த வலிமைபடைத்த சூரபன்மாவின் குலத்தை இல்லாமற்செய்த மதவலி எனும் பெயரை உடையாய் என உவமிக்கப்படுவாய்; தலைவன் என்று

270. நசை - விருப்பம். 274. இயவுள் - தலைவன்.

யான்அறி அளவையின் ஏத்தி ஆனாது
நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி உள்ளி வந்தனன் நின்னொடு
புரைகுநர் இல்லாப் புலமை யோய்எனக்
குறித்தது மொழியா அளவையின் குறித்துடன்
வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் றானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்

---

யான் அறிந்து, நினக்குக் கூறிய அளவாலே நீயும் அமையாதே பலவற்றையும் கூறிப் புகழ்ந்து உனது தன்மைகளெல்லாம் முற்ற அளவிட்டு அறிதல் பல்லுயிர்க்கும் அரிது ஆகையினாலே உன்னுடைய திருவடியைப் பெறவேண்டும் என்று நினைந்து வந்தேன்.

*280 - 290 :* உன்னோடு ஒப்பாரில்லாத உண்மை ஞானத்தை உடையோய் என்று சொல்லி நீ கருதிய வீடுபேற்றினை விண்ணப்பஞ்செய்வதற்கு முன்னே வேறு வேறாகிய பல வடிவினையுடைய பலர் வணங்கி நிற்பார் சேர எண்ணி விழவு எடுத்த களத்திடத்தே தாங்கள் பொலிவுபெறத் தோன்றி அறிவு முதிர்ந்த வாய்மையையுடைய புலவன்றான் அளிக்கத்தக்கான். பெரும; உனது சிறந்த புகழைக்கூற விரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதி பயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்திவந்தோனென்றுகூற, தெய்வத்

279. உள்ளி - கருதி. 283. சாறு - விழா.

வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல்நின் வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவின்(று)
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்(து)
ஒருநீ யாகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன்
வேறுபல் துகிலின் நுடங்கி அகில்சுமந்(து)

---

தன்மை அமைந்த வலிமை விளங்கும் வடிவினையும், வானைத் தீண்டும் வளர்ச்சியினையும் உடைய தான் அவையை வந்து அணுகி வருத்தமமைந்த தெய்வத் தன்மையை உள்ளடக்கிக்கொண்டு மணம் நாறுகின்ற தெய்வத்தன்மையை உடைய பழமையாகிய தனது இளையவடிவைக் காட்டி,

*291 - 295 :* நீ வீடுபெற நினைத்துவந்த வரவை யான் முன்னே அறிவேன். அது உனக்கு அடைவது அரிதென்று அஞ்சுவதை விட்டுவிடு என்று என் மேல் அன்புடைத்தாகிய நல்ல சொற்களைப் பலகாலும் கூறி அருள்செய்து இருண்ட நிறத்தையுடைய கடல்சூழ்ந்த உலகத்தில் நீ ஒருவனுமே பிறர்க்கு வீடு அளித்தற்குரியையாய்க் கேடின்றித் தோன்றும்படிச் சிறப்பாகிய பிறரால் பெறுதற்கரிய வீடுபேற்றினைக் கொடுத்தருளுவன்.

*296 - 305 :* வேறுபட்ட பலநிற ஆடைகளைப் போன்று அம்மலையின் இழியும் அருவிகளும் அவ்வந்

**292.** அளைஇ - அருள்புரிந்து. **296.** நுடங்கி - ஒடுங்கி.

ஆர முழுமுதல் உருட்டி வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரை பரிதியிற் றொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று

---

நிலத்திற்குரிய நிறங்களைப்பெற்று அசைந்து வருகின்றது. அகில் மரங்களைச் சுமந்துவரும்; சந்தன மரத்தின் அடித்தூர்களை உருட்டிக்கொண்டுவரும்; மலைகளிலுள்ள பூத்த சிறு மூங்கிலின்வேரைப் பிளக்கும். பூத்த மூங்கில்கள் தலைசாயும். விண்ணுலகைத் தீண்டுகின்ற அம்மலையின் உச்சியிலே தேன்கூடுகள் நிறைந்து காணப்படும். அத்தேன்கூடுகளைச் சிதைக்கும். முதிர்ந்த பலாப்பழங்கள் பறிப்பாரின்றித் தாமே வெடிக்கும். உள்ளூற்ற பலாச்சுளைகள் பிதுங்கிவிழும். அருவிகள் அவற்றை அடித்துக்கொண்டுவரும். சுரபுன்னைப் பூக்கள் நறுமணத்தோடு அருவிகளின்மேல் உதிர்ந்துவிழும். அருவிகள் அவற்றையும் அடித்துக்கொண்டுவரும். அம்மலையின் பிறிதோரிடத்தில் கரிய முகத்தையுடைய பெண்குரங்குகளோடு ஆண்குரங்குகளும் அருவியின்வேகத்தைக்கண்டு அஞ்சும். அழகிய பெண்யானைகள் குளிரும்படி வீசி, பெரிய யானையின்

297. முழுமுதல் - அடிப்பக்கத்தூர். 300. இறால் - தேன்கூடு. 301. ஆசினி - பலா. 302. நாகம் - சுரபுன்னை. யூகம் - கருங்குரங்கு. 303. பனிப்ப - நடுங்க. பூநுதல் - புள்ளிகளையுடைய நெற்றி. 304. இரும்பிடி - பெரிய பெண்யானை.

முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொ(டு)
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்(டு)

---

முத்துக்களையுடைத்தாகிய வெள்ளிய கொம்புகளை உள்ளடக்கி எடுத்துவரும்.

*306 - 317 :* நல்ல பொன்னையும் மணிகளையும் கொழித்துக்கொண்டு மேடு பள்ளங்களில் குதித்து, தாமே விளைந்துள்ள வாழையின் தாரைச் சாய்க்கும். தென்னையின் இளநீர் நிறைந்த குலைகளைத் தாக்கி உதிர்க்கும். மிளகுக்கொடிகளை அடியோடு சாய்த்துக் கவிழ்க்கும். மயில் கூட்டங்களையும், கோழிகளையும் அது வெருட்டும். கரடிகளும் பன்றிகளும் அருவியின் வேகத்தைக்கண்டு அஞ்சி ஒடுங்கி, கரியகொம்பும் கரிய உடலும் பெற்ற காட்டெருமைக்கிடாக்கள் மலையின் உச்சியிலிருந்து 'இழும்' என்ற ஒலியுடன் விழுந்து செல்லும் வேகமான அருவிகளைக்கண்டு கதறும். இத்தகைய செயல்களும் பிறவும் அம்மலையினிடத்து

307. துமிய - சாய்க்க. 308. கறி - மிளகு. 311. கேழல் - ஆண்பன்றி. 312. புன்சாய் - புல்லிய கருநிறம் 313. உளியம் - கரடி.

ஆமா நல்லேறு சிலைப்பச் சேணின்(று)
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

திருச்சிற்றம்பலம்.

---

என்றும் நிகழும். மேலும் பழம்முற்றின சோலைகளை யுடையது அம்மலை. அம்மலைக்குத் தலைவன் முருகன். அவன் தானே முன்வந்து அருள்வழங்குவான்.

315. ஆமா நல்ஏறு - காட்டெருமை. சிலைப்ப - முழங்க. 317. கிழவோன் - உரியவன். இங்கு முருகனை உணர்த்திற்று.

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படைக்கு
இக்காலத் தோர்தம் இயல்பறிந்து - முற்காலத்
தாசான் வழிநின் றகல வுரைகண்டான்
தாசனும் சுப்ர மணியன்.

முற்றும்

## நேரிசைவெண்பா

குன்றம் எறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்—என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய்என் உள்ளத் துறை. 1

குன்றம் எறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல். 2

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. 3

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்குக்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். 4

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. 5

அஞ்சு முகந்தோன்றில் ஆறு முகந்தோன்றும்
வெஞ்ச மரந்தோன்றில் வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன். 6

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். 7

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி. 8

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்
ஆசையாய் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். 9

நக்கீரர் தாம்உரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாள்தோறும் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தான்நினைத்த எல்லாம் தரும். 10

திருச்சிற்றம்பலம்

உ

## அருணகிரிநாதசுவாமிகள்

அருளிச்செய்த

# கந்தரலங்காரம்

---

கட்டளைக்கலித்துறை

### காப்பு

அடலரு ணைத்திருக் கோபுரத்
  தேயந்த வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகொண்
  டேன்வரு வார்தலையில்
தடப டெனப்படு குட்டுடன்
  சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக்
  கிளைய களிற்றினையே.

### நூல்

பேற்றைத் தவஞ்சற்று மில்லாத
  வென்னைப்ர பஞ்சமென்னுஞ்
சேற்றைக் கழிய வழிவிட்ட
  வாசெஞ் சடாடவிமேல்
ஆற்றைப் பணியை யிதழியைத்
  தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான்
  குமாரன்க்ரு பாகரனே. 1

அழித்துப் பிறக்கவொட் டாவயில்
வேலன் கவியையன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றி
லீரெரி மூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்குவெங்
கூற்றன் விடுங்கயிற்ருற்
கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன்
ரேகவி கற்கின்றதே. 2

தேரணி யிட்டுப் புரமெரித்
தான்மகன் செங்கையில்வேல்
கூரணி யிட்டணு வாகிக்
கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த
கடக நெளிந்ததுசூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர
லோகம் பிழைத்ததுவே. 3

ஓரவொட் டாரொன்றை யுன்னவொட்
டார்மல ரிட்டுனதாள்
சேரவொட் டாரைவர் செய்வதென்
யான்சென்று தேவருய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக்
காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப்
போதினிற் கொன்றவனே. 4

திருந்தப் புவனங்க ளீன்றபொற்
பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டி
லேறி யறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச்
சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்
றோதுங் குவலயமே. 5

பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல்
காக்கின்ற பேதைகொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பி
னுல்மெல்ல மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மானந்தந்
தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும்
புளித்தறக் கைத்ததுவே. 6

சளத்திற் பிணிபட் டசட்டுக்
கிரியைக்குட் டவிக்குமென்றன்
உளத்தில் ப்ரமத்தைத் தவிர்ப்பா
யவுண ருரத்துதிரக்
குளத்திற் குதித்துக் குளித்துக்
களித்துக் குடித்துவெற்றிக்
களத்திற் செருக்கிக் கழுதாட
வேல்தொட்ட காவலனே. 7

ஒளியில் விளைந்த வுயர்ஞான
பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொ ரானந்தத்
தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப்
பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக
மாறுடைத் தேசிகனே. 8

தேனென்று பாகென் றுவமிக்கொ
ணுமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த
தொன்றுண்டு கூறவற்றே
வானன்று காலன்று தீயன்று
நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி
யன்று சரீரியன்றே. 9

சொல்லுகைக் கில்லையென் றெல்லா
மிழந்துசும் மாவிருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட்ட
வா இகல் வேலனல்ல
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக்
கல்வரைக் கொவ்வைச் செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத்
தோளண்ணல் வல்லபமே. 10

குசைநெகி ழாவெற்றி வேலோ
னவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட
வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது
மேரு அடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட அத்துளின்
வாரி திடர்பட்டதே. 11

படைபட்ட வேலவன் பால்வந்த
வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக்
கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக
முதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமு மாமேரு
வெற்பு மிடிபட்டவே. 12

ஒருவரைப் பங்கி லுடையாள்
குமார னுடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி யோசை
படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட்
டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்று மதிர்ந்தன
தேவர் பயங்கெட்டதே. 13

குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடு
மைவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை யீடேற்று
வாயிரு நான்குவெற்பும்
அப்பாதி யாய்விழ மேருங்
குலுங்கவிண் ணுருமுய்யச்
சப்பாணி கொட்டிய கையா
றிரண்டுடைச் சண்முகனே. 14

தாவடி யோட்டு மயிலிலுந்
தேவர் தலையிலுமென்
பாவடி யேட்டிலும் பட்டதன்
றோபடி மாவலிபான்
மூவடி கேட்டன்று மூதண்ட
கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான்
மருகன்றன் சிற்றடியே. 15

தடுங்கோள் மனத்தை விடுங்கோள்
வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோ ளிருந்த படியிருங்
கோளெழு பாருமுய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றந்
திறக்கத் தொளைக்கவைவேல்
விடுங்கோ னருள்வந்து தானே
யுமக்கு வெளிப்படுமே. 16



வேதா கமசித்ர வேலா
யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணுக
அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே
யொளித்துச்சும் மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி
யாதொரு பூதர்க்குமே. 17

வையிற் கதிர்வடி வேலோனை
வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும்
பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க வுதவா
வுடம்பின் வெறுநிழல்போல்
கையிற் பொருளு முதவாது
காணுங் கடைவழிக்கே. 18

சொன்ன கிரௌஞ்ச கிரியூ
டுருவத் தொளைத்தவைவேல்
மன்ன கடம்பின் மலர்மாலை
மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா
மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேனிறந்
தேவிட்ட திவ்வுடம்பே. 19

கோழிக் கொடிய னடிபணி
யாமற் குவலயத்தே
வாழக் கருது மதியிலி
காளுங்கள் வல்வினைநோய்
ஊழிற் பெருவலி யுண்ணவொட்
டாதுங்க ளத்தமெல்லாம்
ஆழப் புதைத்துவைத் தால்வரு
மோநும் மடிப்பிறகே. 20

மரணப்ர மாத நமக்கில்லை
யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண்
டேகிண் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி
மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ரு பாகர ஞானு
கரசுர பாஸ்கரனே. 21

மொய்தா ரணிகுழல் வள்ளியை
வேட்டவன் முத்தமிழால்
வைதாரையு மங்கு வாழவைப்
போன்வெய்ய வாரணம்போல்
கைதா னிருப துடையான்
தலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள்
பயந்த இலஞ்சியமே. 22

தெய்வத் திருமலைச் செங்கோட்டில்
வாழுஞ் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவ
னேமற வேனுனை நான்
ஐவர்க் கிடம்பெறக் காலிரண்
டோட்டி யதிலிரண்டு
கைவைத்த வீடு குலையுமுன்
னேவந்து காத்தருளே. 23

கின்னங் குறித்தடி யேன்செவி
நீயன்று கேட்கச்சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி
விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக்
கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்றுகல்
யாண முயன்றவனே. 24

தண்டா யுதமுந் திரிசூல
மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு
வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத
ஞானச் சுடர்வடிவாள்
கண்டாய டாவந்த காவந்து
பார்சற்றென் கைக்கெட்டவே. 25

நீலச் சிகண்டியி லேறும்
பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு
வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி
வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப்
பார்வெறுங் கர்மிகளே. 26

ஓலையுந் தூதருங் கண்டுதிண்
டாட லொழித்தெனக்குக்
காலையு மாலையு முன்னிற்கு
மேகந்த வேள்மருங்கிற்
சேலையுங் கட்டிய சீராவுங்
கையிற் சிவந்தசெச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந்
தோகையும் வாகையுமே. 27

வேலே விளங்கு கையான்செய்ய
தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளவிங்ஙன் காண்பதல்
லான்மன வாக்குச்செய
லாலே யடைதற் கரிதா
யருவுரு வாகியொன்று
போலே யிருக்கும் பொருளையெவ்
வாறு புகல்வதுவே. 28

கடத்திற் குறத்தி பிரானரு
ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணேயென யான்கடந்
தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்தசெவ்
வாயிற் பணேயிலுந்தித்
தடத்திற் றனத்தில் கிடக்கும்வெங்
காம சமுத்திரமே. 29

பாலென் பதுமொழி பஞ்சென்
பதுபதம் பாவையர்கண்
சேலென்ப தாகத் திரிகின்ற
நீசெந்தி லோன்றிருக்கை
வேலென் கிலேகொற்ற மயூர
மென்கிலே வெட்சித்தண்டைக்
காலென் கிலேமன மேயெங்ங
னேமுத்தி காண்பதுவே. 30

பொக்கக் குடிலிற் புகுதா
வகைபுண்ட ரீகத்தினுஞ்
செக்கச் சிவந்த கழல்வீடு
தந்தருள் சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட்
டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர்
வேல்தொட்ட காவலனே. 31

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்
புடன்கிரி யூடுருவத்
தொளைத்துப் புறப்பட்ட வேற்கந்த
னேதுறந் தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப்
பதைக்க வதைக்குங்கண்ணார்க்
கிளைத்துத் தவிக்கின்ற என்னையெந்
நாள்வந் திரட்சிப்பையே. 32

முடியாப் பிறவிக் கடலிற்
புகார்முழு துங்கெடுக்கு
மிடியாற் படியில் விதனப்
படார்வெற்றி வேற்பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள்
அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு
நாமம் புகல்பவரே. 33

பொட்டாக வெற்பைப் பொருதகந்
தாதப்பிப் போனதொன்றற்
கெட்டாத ஞான கலைதரு
வாயிருங் காமவிடாய்ப்
பட்டா ருயிரைத் திருகிப்
பருகிப் பசிதணிக்குங்
கட்டாரி வேல்விழி யார்வலைக்
கேமனங் கட்டுண்டதே. 34

பத்தித் துறையிழிந் தான ந்த
வாரி படிவதினல்
புத்தித் தரங்கந் தெளிவதென்
ரூேபொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ
ரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமரா
வதிகொண்ட கொற்றவனே. 35

சுழித்தோடு மாற்றிற் பெருக்கா
னதுசெல்வம் துன்பமின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ்
சேகரிக் கோட்டுமுத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோட
னென்கிலை குன்றமெட்டுங்
கிழித்தோடு வேலென் கிலையெங்ங
னேமுத்தி கிட்டுவதே. 36

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர்
காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேன்மற
வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டுடு
டுடுடுடு டுண்டுடுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ்
சூர்க்கொன்ற ராவுத்தனே. 37

நாளென் செயும்வினை தானென்
செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென்
செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையுஞ் சண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே. 38

உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந்
தீர்த்தெனை யுன்னிலொன்ரு
விதித்தாண் டருள்தருங் காலமுண்
டோவெற்பு நட்டுரக
பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம்
பம்பரம் பட்டுழல
மதித்தான் திருமரு காமயி
லேறிய மாணிக்கமே. 39

சேல்பட் டழிந்தது செந்தூர்
வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி
யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ்
சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை
மேலயன் கையெழுத்தே. 40

பாலே யனைய மொழியார்த
மின்பத்தைப் பற்றியென்றும்
மாலேகொண் டுய்யும் வகையறி
யேன்மலர்த் தாள்தருவாய்
காலே மிகவுண்டு காலே
யிலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன்
மருகசெவ் வேலவனே. 41

நிணங்காட்டுங் கொட்டிலை விட்டொரு
வீடெய்தி நிற்கநிற்குங்
குணங்காட்டி யாண்ட குருதே
சிகனங் குறச்சிறுமான்
பணங்காட்டு மல்குற் குருகுங்
குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந்தி தெங்கே
யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே. 42

கவியாற் கடலடைத் தோன்மரு
கோனைக் கணபணக்கட்
செவியாற் பணியணி கோமான்
மகனைத் திறலரக்கர்
புவியாற் பெழத்தொட்ட போர்வேன்
முருகனைப் போற்றியன்பாற்
குவியாக் கரங்கள்வந் தெங்கே
யெனக்கிங்ஙன் கூடியவே. 43

தோலாற் சுவர்வைத்து நாலாறு
காலிற் சுமத்தியிரு
காலா லெழுப்பி வளைமுது
கோட்டிக்கைந் நாற்றிநரம்
பாலார்க் கையிட்டுத் தசைகொண்டு
மேய்ந்த அகம்பிரிந்தால்
வேலாற் கிரிதொளைத் தோனிரு
தாளன்றி வேறில்லையே. 44

ஒருபூ தருமறி யாத்தனி
வீட்டி லுரையுணர்வற்
றிருபூத வீட்டி லிராமலென்
றுணிரு கோட்டொருகைப்
பொருபூ தரமுரித் தேகாச
மிட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவ னிட்டூர
சூர குலாந்தகனே. 45

நீயான ஞான வினோதந்
தனையென்று நீயருள்வாய்
சேயான வேற்கந்த னேசெந்தி
லாய்சித்ர மாதரல்குற்
றோயா வுருகிப் பருகிப்
பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மனோதுக்க
மானது மாய்வதற்கே. 46

பத்தித் திருமுக மாறுடன்
பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண்
டேன்செயன் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப்
பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர
மானந்த சாகரத்தே. 47

புத்தியை வாங்கிநின் பாதாம்
புயத்திற் புகட்டியன்பாய்
முத்தியை வாங்க அறிகின்றி
லேன்முது சூர்நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ
குவடு தவிடுபடக்
குத்திய காங்கேய னேவினை
யேற்கென் குறித்தனையே. 48

சூரிற் கிரியிற் கதிர்வே
லெறிந்தவன் தொண்டர்குழாஞ்
சாரிற் கதியன்றி வேறிலை
காண்தண்டு தாவடிபோய்த்
தேரிற் கரியிற் பதியிற்
றிரிபவர் செல்வமெல்லாம்
நீரிற் பொறியென் றறியாத
பாவி நெடுநெஞ்சமே. 49

படிக்குந் திருப்புகழ் போற்றுவன்
கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென்
பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு காகொடுஞ்
சூரன் நடுங்கவெற்பை
இடிக்குங் கலாபத் தனிமயி
லேறு மிராவுத்தனே. 50

மலையாறு கூறெழ வேல்வாங்கி
னானை வணங்கியன்பின்
நிலையான மாதவஞ் செய்குமி
னோநும்மை நேடிவருந்
தொலையா வழிக்குப் பொதிசோறு
முற்ற துணையுங்கண்டீர்
இலையா யினும்வெந்த தேதாயினும்
பகிர்ந் தேற்றவர்க்கே. 51

சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ்
சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வ மீபணி பாசசங்
க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி
துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச விட்சோப
தீர குணதுங்கனே. 52

வேடிச்சி கொங்கை விரும்புங்
குமரனை மெய்யன்பினுல்
பாடிக் கசிந்துள்ள போதே
கொடாதவர் பாதகத்தால்
தேடிப் புதைத்துத் திருட்டிற்
கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை
வீணுக்கு மாய்ப்பவரே. 53

சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு
மன்றித் தளர்ந்தவர்க்கொன்
றீகைக் கெனைவிதித் தாயிலை
யேயிலங் காபுரிக்குப்
போகைக்கு நீவழி காட்டென்று
போய்க்கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மரு
காமயில் வாகனனே. 54

ஆங்கா ரமுமடங் காரொடுங்
கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு
மருர்தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே
முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்
செய்வார் யமதூதருக்கே. 55

கிழியும் படியடற் குன்றெறிந்
தோன்கவி கேட்டுருகி
இழியுங் கவிகற் றிடாதிருப்
பீரெரி வாய்நரகக்
குழியுந் துயரும் விடாய்ப்படக்
கூற்றுவ னூர்க்குச்செல்லும்
வழியுந் துயரும் பகரீர்
பகரீர் மறந்தவர்க்கே. 56

பொருபிடி யுங்களி றும்விளை
யாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல சண்முக
வாவெனச் சாற்றிநித்தம்
இருபிடி சோறுகொண் டிட்டுண்
டிருவினை யோமிறந்தால்
ஒருபிடி சாம்பருங் காணுது
மாயா வுடம்பிதுவே. 57

நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல்
காக்கின்ற நீலவள்ளி
முற்றுத் தனத்திற் கினிய
பிரானிக்கு முல்லையுடன்
பற்றுக்கை யும்வெந்து சங்க்ராம
வேளும் படவிழியாற்
செற்றூர்க் கினியவன் தேவேந்த்ர
லோக சிகாமணியே. 58

பொங்கார வேலையில் வேலையிட்
டோனருள் போலுதவ
எங்கா யினும்வரு மேற்பவர்க்
கிட்ட திடாமல்வைத்த
வங்கா ரமுமுங்கள் சிங்கார
வீடு மடந்தையருஞ்
சங்காத மோகெடு வீருயிர்
போமத் தனிவழிக்கே. 59

சிந்திக்கி லேனின்று சேவிக்கி
லேன்தண்டைச் சிற்றடியை
வந்திக்கி லேனென்றும் வாழ்த்து
கிலேன்மயில் வாகனனைச்
சந்திக்கி லேன்பொய்யை நிந்திக்கி
லேனுண்மை சாதிக்கிலேன்
புந்திக் கிலேசமுங் காயக்
கிலேசமும் போக்குதற்கே. 60

வரையற் றவுணர் சிரமற்று
வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்
தவாபஞ்ச பூதமுமற்
றுரையற் றுணர்வற் றுடலற்
றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற்
றிருக்குமக் காட்சியதே. 61

ஆலுக் கணிகலம் வெண்டலை
மாலை யகிலமுண்ட
மாலுக் கணிகலந் தண்ணந்
துழாய்மயி லேறுமையன்
காலுக் கணிகலம் வானோர்
முடியுங் கடம்புங்கையில்
வேலுக் கணிகலம் வேலையுஞ்
சூரனு மேருவுமே. 62

பாதித் திருவுருப் பச்சென்
றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வே
லனைச்சென்று போற்றியுய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ
அழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே
யெனக்கிங்ஙன் சந்தித்ததே. 63

பட்டிக் கடாவில் வருமந்த
காவனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாதுவிடேன்
வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு
மாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி
வாளென்றன் கையதுவே. 64

வெட்டுங் கடாமிசைத் தோன்றும்வெங்
கூற்றன் விடுங்கயிற்ருல்
கட்டும் பொழுது விடுவிக்க
வேண்டுங் கராசலங்கள்
எட்டுங் குலகிரி யெட்டும்விட்
டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங்
கலாப மயூரத்தனே. 65

நீர்க்கு மிழிக்கு நிகரென்பர்
யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு
மென்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட வென்னினெங்
கேனு மெழுந்திருப்பார்
வேற்கு மரர்க்கன் பிலாதவர்
ஞான மிகவுநன்றே. 66

பெறுதற் கரிய பிறவியைப்
பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற்
றிலேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம
சயில சரசவல்லி
இறுகத் தழுவுங் கடகா
சலபன் னிருபுயனே. 67

சாடுஞ் சமரத் தனிவேன்
முருகன் சரணத்திலே
ஓடும் கருத்தை யிருத்தவல்
லார்க்குகம் போய்ச்சகம்போய்ப்
பாடுங் கவுரி பவுரிகொண்
டாடப் பசுபதிநின்
ருடும் பொழுது பரமா
யிருக்கு மதீதத்திலே. 68

தந்தைக்கு முன்னந் தனிஞான
வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி யெனைத்தேற்
றியபின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை யென்செய்ய
லாஞ்சத்தி வாளொன்றினுல்
சிந்தத் துணிப்பன் தணிப்பருங்
கோபத்ரி சூலத்தையே. 69

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள் மெய்ம்மைகுன்ரு
மொழிக்குத் துணைமுரு காவெனு
நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு
தோளும் பயந்ததனி
வழிக்குத் துணிவடி வேலுஞ்செங்
கோடன் மயூரமுமே. 70

துருத்தி யெனும்படி கும்பித்து
வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென்
ஞஞ்சிவ யோகமென்னுங்
குருத்தை யறிந்து முகமா
றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண்
டீர்முத்தி கைகண்டதே. 71

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே. 72

போக்கும் வரவு மிரவும்
பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில்
லாதொன்று வந்துவந்து
தாக்கு மனோலயந் தானே
தருமெனைத் தன்வசத்தே
ஆக்கு மறுமுக வாசொல்லொ
ணாதிந்த ஆனந்தமே. 73

அராப்புனை வேணியன் சேயருள்
வேண்டு மவிழ்ந்தஅன்பாற்
குராப்புனை தண்டையந் தாள்தொழல்
வேண்டுங் கொடியஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும்
பதைப்பறல் வேண்டுமென்றால்
இராப்பக லற்ற இடத்தே
இருக்கை யெளிதல்லவே. 74

படிக்கின் றிலைபழ நித்திரு
நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென்
கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மானந்த
மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச
மேது நமக்கினியே. 75

கோடாத வேதனுக் கியான்செய்த
குற்றமென் குன்றெறிந்த
தாடாள னேதென் தணிகைக்
குமரநின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத
கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவு மெனக்கே
தெரிந்து படைத்தனனே. 76

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப்
பயோதரஞ் சேரஎண்ணி
மால்வாங்கி யேங்கி மயங்காமல்
வெள்ளி மலையெனவே
கால்வாங்கி நிற்குங் களிற்ருன்
கிழத்தி கழுத்திற்கட்டு
நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி
பூங்கழல் நோக்குநெஞ்சே. 77

சூர்கொண்ட வேலனைப் போற்ரும
லேற்றங்கொண் டாடுவீர்காள்
போர்கொண்ட கால னுமைக்கொண்டு
போமன்று பூண்பனவுந்
தார்கொண்ட மாதரு மாளிகை
யும்பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவரை யோகெடு
வீர்நும் மறிவின்மையே. 78

பந்தாடு மங்கையர் செங்கயற்
பார்வையிற் பட்டுழலுஞ்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள்
வாய்செய்ய வேல்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ்
திருத்தணிக் குன்றினிற்கும்
கந்தா இளங்கும ராஅம
ராபதி காவலனே. 79

மாகத்தை முட்டி வருநெடுங்
கூற்றன்வந் தாலென்முன்னே
தோகைப் புரவியிற் றோன்றிநிற்
பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந்
தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல்
யாணிதன் பாலகனே. 80

தாரா கணமெனுந் தாய்மார்
அறுவர் தருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பாலுண்ட
பால னரையிற்கட்டுஞ்
சிராவுங் கையிற் சிறுவாளும்
வேலுமென் சிந்தையவே
வாரா தகலந்த காவந்த
போதுயிர் வாங்குவனே. 81

தகட்டிற் சிவந்த கடம்பையு
நெஞ்சையுந் தாளிணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தரு
ளாய்புண்ட ரீகனண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர
லோகத்தை முட்டவெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிட்டூர
சூர பயங்கரனே. 82

தேங்கிய அண்டத் திமையோர்
சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள்
கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது
சூரன் தளந்தனிவேல்
வாங்கி யனுப்பிடக் குன்றங்க
ளெட்டும் வழிவிட்டவே. 83

மைவருங் கண்டத்தர் மைந்தகந்
தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி
யேன்கற்ற கல்வியும்போய்
பைவரும் கேளும் பதியுங்
கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும்
போதுன் னடைக்கலமே. 84

காட்டிற் குறத்தி பிரான்பதத்
தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதன் மிகவெளி
தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார
நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற்
சாதிக்கும் யோகிகளே. 85

வேலா யுதன்சங்கு சக்ரா
யுதன்விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன்தந்த கந்தச்
சுவாமி சுடர்க்குடுமிக்
காலா யுதக்கொடி யோனரு
ளாய கவசமுண்டென்
பாலா யுதம்வரு மோயம
னோடு பகைக்கினுமே. 86

குமரா சரணஞ் சரணமென்
றண்டர் குழாந்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள்
திருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான
ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு
வந்தினி யென்செயுமே. 87

வணங்கித் துதிக்க அறியா
மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை ஈடேற்று
வாய்கொடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கை யலகைகொண்
டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலா
யுதந்தொட்ட நிர்மலனே. 88

பங்கே ருகனெனப் பட்டோ
ஸ்லயிலிடப் பண்டுதஸள
தங்காலி லிட்ட தறிந்தில
ஞேதனி வேலெடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ்
சிலம்பு புலம்பவரும்
எங்கோ னறியி னினிநான்
முகனுக் கிருவிலங்கே. 89

மாலோன் மருகனே மன்ருடி
மைந்தனே வானவர்க்கு
மேலான தேவனே மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழிற் செங்கோ
டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில
னேயந்த நான்முகனே. 90

கருமான் மருகனேச் செம்மான்
மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக்
கோளனை வானமுய்யப்
பொருமா வினைசெற்ற போர்வேல
னைக்கன்னிப் பூகமுடன்
தருமா மருவுசெங் கோடனை
வாழ்த்துகை சாலநன்றே. 91

தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக்
குஞ்சுத்த ஞானமெனுந்
தண்டையம் புண்டரி கந்தரு
வாய்சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலங் கொண்டுபண் டண்டரண்
டங்கொண்டு மண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல்
வேல்தொட்ட காவலனே. 92

மண்கம ழுந்தித் திருமால்
வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங்
கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும்
பிள்ளைத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதின
லுலகமுங் கேட்டதுவே. 93

தெள்ளிய ஏனலிற் கிள்ளையைக்
கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேட்டவன் தாள்வேட்
டிலேசிறு வள்ளை தள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையை
தோதகச் சொல்லைநல்ல
வெள்ளிய நித்தில வித்தார
மூரலை வேட்டநெஞ்சே. 94

யான்தா னெனுஞ்சொ லிரண்டுங்கெட்
டாலன்றி யாவருக்குந்
தோன்றுது சத்தியந் தொல்லைப்
பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றுன் மருகன் முருகன்
க்ருபாகரன் கேள்வியினுற்
சான்றுரு மற்ற தனிவெளிக்
கேவந்து சந்திப்பதே. 95

தடக்கொற்ற வேள்மயி லேயிடர்
தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின்
ரேகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப்
புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப்
புறத்துந் திரிகுவையே. 96

சேலிற் றிகழ்வயற் செங்கோடை
வெற்பன் செழுங்கலபி
ஆலித் தனந்தன் பணுமுடி
தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க
ராசியும் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்ரா
யுதமும் பணிலமுமே. 97

கதிதனை யொன்றையுங் காண்கின்றி
லேன்கந்த வேல்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன்
பாய்நரம் பாற்பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு
மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென்
றன்மனம் வேகின்றதே. 98

காவிக் கமலக் கழலுடன்
சேர்த்தெனைக் காத்தருள்வாய்
தூவிக் குலமயில் வாகன
னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம்
பிலாத தனிக்கொடிபோல்
பாவித் தனிமனந் தள்ளாடி
வாடிப் பதைக்கின்றதே. 99

இடுதலைச் சற்றுங் கருதேனைப்
போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்தொண் டரிற்கூட்
டியவா கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன்
பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது
பாச வினைவிலங்கே. 100

## நூற்பயன்

சலங்காணும் வேந்தர் தமக்குமஞ்
சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு
கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்கும் கரடிக்கும்
யானைக்குங் கந்தனன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி
தான்கற் றறிந்தவரே. 101

முற்றும்

## அதிகப்பாடல்கள்

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம்
புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந்
தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்க
ளாறும் மலர்க்கண்களும்
குருவடி வாய்வந்தென் னுள்ளங்
குளிரக் குதிகொண்டவே. 1

இராப்பக லற்ற இடங்காட்டி
யானிருந் தேதுதிக்க
குராப்புனை தண்டையந் தாளரு
ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற
நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங்
கார பயங்கரனே. 2

செங்கே ழடுத்த சிவனடி
வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு
தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங்
கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேயென்
முன்வந் ததிர்நிற்பனே. 3

ஆவிக்கு மோசம் வருமா
றறிந்துன் னருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றி
லேன்வினை தீர்த்தருள்வாய்
வாவித் தடவயல் சூழுந்
திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே
யமர சிகாமணியே. 4

கொள்ளித் தலையில் எறும்பது
போலக் குலையுமென் றன்
உள்ளத் துயரை யொழித்தரு
ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின்
மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி
லேறிய மாணிக்கமே. 5

சூலம் பிடித்தெம பாசஞ்
சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் தனக்கொரு காலுமஞ்
சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான்
குமாரன் அறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே
நமக்கொரு மெய்த்துணையே. 6

---

# பிள்ளைத்தமிழ்ப் பாடல்கள்

---

## 1. திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

கத்துந் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்தில்
கான்ற மணிக்கு விலையுண்டு
தத்துங் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளந் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்
கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கும் விலையுண்டு
கொண்டல் தருநித் திலந்தனக்குக்
கூறுந் தரமுண்(டு) உன்கனிவாய்
முத்தந் தனக்கு விலையில்லை
முருகா! முத்தம் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா! முத்தம் தருகவே.

கலைப்பால் குறைத்த பிறைமுடிக்குங்
கடவு ளுடலின் விளைபோகங்
கனலி கரத்தி லளிக்கஅந்தக்
கனலி பொறுக்க மாட்டாமல்

மலைப்பால் விளங்குஞ் சரவணத்தில்
வந்து புகுத ஓராறு
மடவார் வயிறு சூலுளைந்து
மைந்தர் அறுவர்ப் பயந்தெடுப்பக்
கொலைப்பால் விளங்கும் பரசுதரன்
குன்றி லவரைக் கொடுசெல்லக்
கூட்டி யணைத்துச் சேரவொரு
கோல மாக்கிக் கவுரிதிரு
முலைப்பால் குடித்த கனிவாயால்
முருகா! முத்தம் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா! முத்தம் தருகவே. 2

## 2. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

கலைப்பா னிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலங்
கனியக் கனிய அமுதூறுங்
கடவுள் மறையும் முதற்சங்கத்
தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்டே னறையும் வடித்தெடுத்த
சாரங் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழும் நாறத் தடங்கரைகொல்
அலைப்பாய் புனற்றெண் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறையீன்றும்
அழகு முதிர முதிராஎன்
அம்மை அமுது தூற்கொண்ட

முலைப்பால் நாறுஞ் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா! முத்தம் தருகவே. 3

வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டன் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பான் நடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே
கொழிக்குஞ் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியே மனைமுன்றில்
குவியா நின்ற மணிக்குவையக்
குருகு பெயர்க்குன் றமுமன்றால்
சுழிக்குண் டகழி வாய்மடுப்பச்
சுடர்வாய் வளைத்தெண் திரைக்கரத்தால்
சுரபி சொரிபான் மடையடைத்த
சோற்றி னேடுங் கலந்தூட்டிச்
செழிக்குந் தடங்கா விரிநாடா!
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் பழனப் புள்ளூரா!
சிறியேம் சிற்றில் சிதையேலே. 4

## 3. சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

பரியாற் கரடக் கடகரியால்
பார்க்குந் தரணு விளையாடும்
பருவச் சிறார்சிற் றடிப்பொடியும்
பசும்பொற் றொடியார் பலகோடி

பிரியாத் தெருவில் சொரிசுண்ணம்
பிறக்குந் துகளும் அகிற்புகையும்
பெருங்கா ரகிலா வியுங்கரும்பிற்
பிழிந்த பொழிசா றடுங்குய்யும்
அரியாற் குயிலப் பயின்மாடத்
தாடுந் துவசம் குலத்துகிலும்
அண்டத் தளவும் பிறபொதுளி
அமரா வதிக்கொத் திரவுபகல்
தெரியாப் பெரிய வளங்கிளரும்
செய்கைப் பெருமாள்! வருகவே
செவ்வேற் பெருமாள்! மயிற்பெருமாள்!
தெய்வப் பெருமாள்! வருகவே. 5

வெய்யோன் பகலே இரவாக்கும்
விரகிற் பெரிய நின்மாமன்
மேனுள் பொதுவ ரகம்புகந்து
வெண்பா லுறியி னடுக்குழிப்பக்
கையோ ரிரண்டும் பிணித்திலரோ
குடவர் மடவார் சகங்காக்குங்
கடவு ளெனத்தான் பயந்தனரோ
கட்டா தகல விட்டனரோ
ஐயோ புலந்து தமியேமும்
அன்னை மார்க்குஞ் செவிலியர்க்கும்
அழுது மொழிந்தாற் சீறுரோ
அனைத்து மொருவ னுகிநிற்குஞ்
செய்யோன் மகனென் றஞ்சுவரோ
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே. 6

## 4. திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்

உருகா மனமும் சிவஞானம்
உணரா வறிவும் உனதுபுகழ்
ஓதா நாவும் ஓதக்கேட்(டு)
உவந்தே யினிய நதிபோலப்
பெருகா விழியும் உடையேனைப்
பிறவிக் கடலில் வீழாமல்
பேணி யெடுத்திங் கெனதுள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழும்
முருகா! வருக சதுர்வேத
முதல்வா! வருக வினைதீர்க்கும்
முனைவா! வருக மலராறு
முகவா! வருக திருமாலின்
மருகா! வருக மயிலேறும்
மன்னா! வருக அடியார்கள்
வாழ்வே! வருக தெய்வசிகா
மணியே! வருக வருகவே. 7

கண்ணால் உனது திருவடியைக்
கண்டா தரவு பெருகியிரு
கையால் தொழுதுன் திருக்கோயில்
காலால் வலஞ்செய் துனதுபுகழ்
பண்ணால் உருகிப் புகழ்ந்துகண்ணீர்
பாயா எனையும் தாயாகப்
பரிந்து வளர்க்கும் பெருங்கருணை
படைத்து விரிஞ்சைப் பதிவாழும்

அண்ணல்! வருக உலகமுழு
தாண்டாய்! வருக கதிதரும்எம்
ஐயா! வருக ஆறுமுக
அப்பா! வருக விளங்குகதிர்
அண்ணு! வருக மயிலேறும்
அண்ணு! வருக அடியார்கள்
வாழ்வே! வருக தெய்வசிகா
மணியே! வருக வருகவே. 8

5. திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்

மெய்வாய் மூக்குக் கண்செவியின்
வழிபோய் விடயங் களையருந்தி
விரவும் வினையால் சுழல்பிறவி
வேலைக் கடக்குங் கருத்துடையார்
ஐவாய் வேட்கை அவா ஒழிந்திட்
டாரு தாரப் படியேறி
ஆரூ டாறங் குலமீதில்
அறியும் நிமலப் பெருவெளியில்
கைவாய் மழுவுங் கறைமிடறும்
கண்ணூர் நுதலும் பிறைமுடியும்
கவினத் தோன்றுஞ் சிவனிடத்தில்
கலந்த உமையா ளுடன்பிறந்த
மொய்வா னறுமீன் உவந்தளித்த
முத்தே! முத்தம் தருகவே
மூலாத் திரியில் எழுஞான
முளையே! முத்தம் தருகவே. 9

கன்னற் குதலைச் செங்கனிவாய்க்
கலச முலைப்பொற் கடைசியர்தங்
கருங்கண் மலரைப் பூந்தடத்தில்
கமலத் தருகு முறுக்கவிழும்
நன்னர்க் குவளை எனஅறுகால்
நாடிப் பெடையி னொடுஞ்சுழலும்
நகைத்தண் தரளம் பொழிநிலவால்
நறும்பூங் குமுதம் வாய்விரியும்
பின்னற் குழலை மேகமெனப்
பெருகுங் களிமா மயிலகவும்
பிறழும் வளைக்கை கஞ்சமெனப்
பிரியா தனங்கள் உவந்தேறும்
வன்னப் பணைசூழ் செருத்தணிகை
வாழ்வே! வருக வருகவே
மலையான் உதவும் உமையாள்கண்
மணியே! வருக வருகவே. 10

## 6. திருப்போரூர்ப் பிள்ளைத்தமிழ்

கருத்தே புகுந்து கதிகாட்டுங்
கண்ணே! வருக மெய்ஞ்ஞானக்
கரும்பே! வருக கருணைபொழி
காரே! வருக ஆனந்தப்
பெருக்கே! வருக யாங்கள்பெறும்
பேறே! வருக மறைசொல்கிளிப்
பிள்ளாய்! வருக பிறங்குதெய்வப்
பெம்மான்! வருக குறமடந்தை

தருக்கே! வருக மிடியகற்றுந்
தருவே! வருக மன்பதைக்கோர்
தஞ்சே! வருக எமையளிக்குந்
தாயே! வருக பவப்பிணிக்கு
மருந்தே! வருக சமரபுரி
வாழ்வே! வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல்! வருக வருகவே. 11

## 7. திருமலைப் பிள்ளைத்தமிழ்

அழிந்து புவன மொழிந்திடினும்
அழியாத் தோணி புரத்தின்மறை
யவர்கள் குலத்தின் உதித்தரனே
டம்மை தோன்றி அளித்தவள்ளச்
செழுந்தண் முலைப்பால் குடித்துமுத்தின்
சிவிகை யேறி மதுரையிற்போய்ச்
செழியன் பிணியும் சமண்பகையும்
தேவி துயரும் தீர்த்தருளி
வழிந்து நறுந்தேன் உகுவனபோல்
மதுரங் கனிந்து கடைதுடிக்க
வடித்துச் தெளிந்த செந்தமிழ்த்தே
வாரப் பாடல் சிவன்கேட்க
மொழிந்து சிவந்த கனிவாய்ச்சண்
முகனே! முத்தம் தருகவே
முத்துக் குமரா! திருமலையின்
முருகா! முத்தம் தருகவே. 12

## 8. க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

திருவலஞ் சுழியைங்க ரத்தனு லயமெனத்
திருவேர கப்பதியெனும்
திருநகர முன்பொனு லயமெனச் சேய்ஞலூர்
திகழ்தண்டி யாலயமென
மருவுமா வடுதுறைவன் விடையினு லயமென்ன
வந்தகு ரியனுலயம்
மகிழ்சூரி யன்கோயி லாமெனச் சீகாழி
வடுகனு லயமாமெனப்
பெருகுசிற் சபைசபா பதியினு லயமெனப்
பேசுதிரு வாரூர்நகர்
பெரியநா யகர்கோயி லென்னவா னோர்களும்
பேணுமிவை மத்தியாகத்
தருமருத வனமகா லிங்கநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே
தந்தைவெண் காடர்புக ழெந்தைமுருகேசனே
சப்பாணி கொட்டியருளே. 13

# திருப்புகழ்ப் பாடல்கள்

## 1. திருப்பரங்குன்றம்

காலன் வரும்போது காட்சி அருளுக

உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன
தருள்மாறு

உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உலப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன்
மலைபோலே

கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலித னுழையினர்
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு
பொருபோதே

கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில் முதுகினில்
வருவாயே

வினைத்த லந்தனி லலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெ யுகுதிசை கழுகுண
விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர்
புரிவேலா

மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன ம்ருகமத புயவரை
யுடையோனே

தினத்தி னஞ்சதுர் மறைமுனி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி ணவரொடு
சினத்தை நிந்தனை செயுமுனி வரர்தொழ
மகிழ்வோனே

தெனத்தெ னந்தன எனவரி அளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழிறிகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண
பெருமாளே.

உன்னைக்காணும் அன்பு தருக

சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ
தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே.

## 2. திருச்செந்தூர்

### திருவடி அன்பு தருக

வரியார் கருங்கண் மடமாதர்
மகவா சைதொந்த மதுவாகி
இருபோ துநைந்து மெலியாதே
இருதா ளினன்பு தருவாயே
பரிபா லனஞ்செய் தருள்வோனே
பரமே சுரன்றன் அருள்பாலா
அரிகே சவன்றன் மருகோனே
அலைவா யமர்ந்த பெருமாளே.

### உன்னை அறியும் அன்பு அருளுக

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே
மயில்தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.

## 3. திருவாவினன்குடி

### திருவருள் பாலிக்க

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையும் மறவாத

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதேம னோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா

ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடேமு னாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதி அந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்ந னாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

ஞானம் அருளுக

சிவனார்ம னங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநாதா
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலேவி ரும்பியுளம் நினையாமல்

அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலும்
அடியேனை அஞ்சலென வரவேணும்
அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே
நவநீத முந்திருடி உரலோடெ யொன்றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே
நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே
தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா
திருவாவி னன்குடியில் வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே.

## 4. திருவேரகம்

முத்திதருக

காமி யத்த முந்தி இளையாதே
காலர் கைப்ப டிந்து மடியாதே
ஓமெ ழுத்தி லன்பு மிகவூறி
ஓவி யத்தி லந்தம் அருள்வாயே
தூம மெய்க்க ணிந்த சுகலீலா
சூர னைக்க டிந்த கதிர்வேலா
ஏம வெற்பு யர்ந்த மயில்வீரா
ஏர கத்த மர்ந்த பெருமாளே.

உன்னை வழிபட அருளுக

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா
காது மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வரவரும் இளையோனே
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே.

## 5. குன்றுதோறாடல்

இடர் அகல அருளுக

அதிருங் கழல்ப ணிந்து னடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாண
இதயந் தனிலி ருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே

எதிரங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கில் உறைபாலா
பதியெங் கிலு மிருந்து விளையாடிப்
பலகுன் றிலு மமர்ந்த பெருமாளே.

திருவடி தருக

வனசமொத் தபதக் குருநாதா
மலைமடப் பிடியுத் தமிபாலா
அனகதத் துவமெய்ப் பொருளானே
அடியனுக் குணபொற் கழல்தாராய்
எனதுயிர்க் குயிரொத் தவநீதா
இபமுகப் பரமற் கிளையோனே
தினைவனத் தெரிவைக் குரியோனே
திருமலைக் குமரப் பெருமாளே.

## 6. பழமுதிர்சோலை

ஞானநடனக்காட்சி தருக

காரணம தாக வந்து புவிமீதே
காலனணு காதி சைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே
ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுக மாறிரண்டு விழியோனே
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா
சோலைமலை மேவி நின்ற பெருமாளே.

## திருமுருகாற்றுப்படை நூல்வரலாறு

---

ஏர்கொண்ட பொய்கைதனில் நிற்குமொரு பேரரசின்
இலைகீழ் விழிற்பறவையாம்
இதுநிற்க நீர்விழிற் கயலாமி தன்றியோர்
இலையங்கு மிங்குமாகப்
பார்கொண்ட பாதியும் பறவைதா னுகஅப்
பாதியும் சேலதாக
பார்கொண் டிழுக்கவது நீர்கொண் டிழுக்கஇப்
படிகண்ட ததிசயமென
நீர்கொண்ட வாவிதனில் நிற்குமொரு பேழ்வாய்
நெடும்பூத மதுகொண்டுபோய்
நீள்வரை யெடுத்ததின் கீழ்வைக்கு மதுகண்டு
நீதிநூல் மங்காமலே
சீர்கொண்ட நக்கீ ரனைச்சிறை விடுத்தவா
செங்கீரை யாடியருளே
திரையெறியும் அலைவா யுகந்தவடி வேலனே
செங்கீரை யாடியருளே.

— திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்.

